# ஸ்ரீராமாநுஜன் 263—265



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்.

— ஸாதாரண௵ ஐப்பசித் திருமூல மலர் —

**3—11—1970.**


ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## அடியேன் செய்யும் விண்ணப்பம் (P. B. A.)



ஐப்பசித் திருமூலமலர் பலவிடங்களிலிருந்து பலவிதமாக வெளிவருவதாய்த் தெரிகின்றது. அவற்றுள் இஃதொருவிதம். தென்னாசார்ய ஸம்பிரதாயத்தில் அதீத காலத்திலும் வர்த்தமான காலத்திலும் புகழ் பெற்றவர்களான பல மஹான்களையும், ஆங்காங்கு ப்ரவசனஞ்செய்து கொண்டிருக்கும் மஹான்களின் காலக்ஷேப கோஷ்டிகளையும் உருவப்படமாக ஸம்பாதித்து, நிகழும் ஸாதாரண ஸம்வத்ஸரம் முடியும் வரையில் மாதந்தோறும் சில சில பாரங்கள் சேர்த்து வெளியிட நிச்சயித்திருக்கிறது. பெரியார்களின் திருவுருவப்படங்களை உபகரிக்குமாறு ஆப்தர்களை இது மூலமாகவே ப்ரார்த்திக்கிறேன். நிகழும் அறுநூறாண்டு மஹோத்ஸவக் கொண்டாட்ட நிகழ்ச்சிகளுக்கு உதவி புரியுமவர்களின் உருவப்படங்களையும் அடைவே வெளியிடுவோம்,

—————

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:   ஸ்ரீமத் வரவரமுநயே நம:

## ஸத்ஸம்ப்ரதாய துரந்தர ஸத்புருஷ கோஷ்டி

# தென்னாசார்யப்பெரியார்களின் திருவுருவமலர்

நம் மணவாள மாமுனிகளின் அறுநூறாண்டுநிறைவுநினைவுமலர்களுள் ஒன்று.

**முதன்முதலாக மணவாளமாமுனிகளின் திவ்யகோஷ்டி.**



'' இப்புவியிலரங்கேசற் கீடளித்தான் வாழியே ''



ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்
ஜகத்குரு. காதி. அனந்தாசார்ய ஸ்வாமி.

ஸ்ரீஸ்வாமி ஸொந்தமாக அச்சுக்கூடத்தை ஸ்தாபித்து நியாயவேதாந்த மீமாம்ஸா சாஸ்த்ர க்ரந்தங்கள் பலவற்றையும் பாஞ்சராத்ர ஸம்ஹிதைகள் ஸம்ப்ரதாயக்ரந்தங்கள் பலவற்றையும் பிரசுரம் செய்தருளினர்.



திருவரங்கம் பெரியகோயில் பெரியபெருமாளும் நம்பெருமாளும்



## ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி.
## வானமாமலை சின்ன கலியன்ஸ்வாமி.

ஸ்ரீஸ்வாமியின் பெரும்புகழ் தென்னுடும் வட நாடும் மிகப் பரவியது. ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளின பிறகு அடுத்த பட்டம் **ஸ்ரீமதுர** கவி ஸ்வாமி பலவாண்டுகள் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்து திருநாடலங்கரித்தாயிற்று. இப்போது ஆஸ்தானத்தை யலங்கரித்தருள் பவர் ஸ்ரீமத் பரமஹம்ஸ சின்னராமானுஜ ஜீயர் ஸ்வாமி. பூர்வாச்ரமத்தில் வித்வான் வானமாமலை ஐயங்கார்ஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தர். திருக்குறுங்குடி ஸ்வாமி, ஆழ்வார்திருநகரி எம்பெருமானுர் ஜீயர்ஸ்வாமி முதலான மடாதிபதிகளின் திருவுருவப்படங்கள் சேகரிக்கப்படுகின்றன.



இங்கே ஸேவைஸாதிக்கிற பெரியஸ்வாமி திருமலை திருப்பதி அனந்தாண் பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியென்று கடல்சூழ்ந்த மண்ணுலகம் முழுவதும் ப்ரக்யாதி பெற்றிருந்த சதுச்சாஸ்த்ர வித்வன்மணி. ஐம்பது வருடங்களுக்குமுன்பு திருநாடலங்கரித்தவர். ஸ்ரீகாஞ்சியில் ப்ரக்க்யாதரா யெழுந்தருளியிருந்த ஜகத்குரு பிரதிவாதிபயங்கரம் உ.வே. காதி. அனந்தாசார்ய ஸ்வாமிக்கு ஸாக்ஷாந்மாதுலர். நித்யாக்நிஹோத்ரியாய் விளங்கின ஜ்ஞாநுஷ்டாநநிதி. ஸ்வாமியின் வலது பக்கத்தில் ஸேவை ஸாதிப்பவர் ஸ்வாமியின் தௌஹித்ரரும் நியாயவேதாந்த வித்யாநிதியாக எழுந்தருளியிருந்தவருமான இந்தோர் பிரதிவாதிபயங்கரம் அனந்தாசார்ய ஸ்வாமி. சென்னையில் பரிகணிதமாக விளங்கும் T. V. S. கம்பெனியில் உத்துங்க பதவியில்வாழும் ஸ்ரீஉவே. (T, A. T. ஸ்வாமி) தி. அ. திருவேங்கடாசாரியருக்கு மாமனாரென்பது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது.

ஸ்வாமியின் இடதுபக்கத்தில் இருப்பவர் திருப்பதி வீரவல்லி ஸ்ரீநிவாஸவரதாசார்யர். ஏழெட்டு வருஷங்களுக்குள்ளாகப் பரமபதித்தவர்.



ஸ்ரீ காஞ்சியில் சுபக்ருத்ஹூ பங்குனி விசாகத திருவீதி கோஷ்டி.

இதில் பல பெரியார்களை ஸேவிக்கப்பெறுகிறோம்.

## ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீமந்நாராயண ராமாநுஜஜீயர் ஸ்வாமியின் உபந்யாஸ கோஷ்டி.



ஏறக்குறைய இருபத்தைந்து முப்பது ஸம்வத்ஸர காலமாக நாற்றிசைகளிலும் விசிஷ்டாத்வைத மதப்ரசாரத்தை வெகு அற்புதமாகச் செய்து வருகிற ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமியை யறியாதாரில்லை. ஆந்திர தேசத்தில் அந்த ஸ்வாமி ஓரிடத்தில் நிகழ்த்திய காலக்ஷேப கோஷ்டி யிது.

... ... .... ... .... ... ...

## ஸ்ரீமதுபயவே. ந்யாய வேதாந்தவித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை அக்காரக்கனி ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டி.

ஸ்ரீ ஸ்வாமியின் கீதாபாஷ்ய காலக்ஷேப சாத்துமுறை கோஷ்டி யிது. காலக்ஷேபத்தில் அந்வயித்து இங்கே காட்சிதருபவர்கள் (1) ஸ்ரீஉவே பிரதிவாதி பயங்கரம் காதி, ஸ்ரீநிவாஸாசார்ய சிரோமணி. (2) தி. ந ச. வரதாசாரியர். (3) கோ. க. அண்ணன்துரைஸாமி ஐயங்கார். (4) ஸ்ரீவில்லிபுத்தூர். பார்த்தஸாரதி ஐயங்கார். (ஸ்ரீகாஞ்சீ)





ஸ்ரீமதுபயவே. நியாயவேதாந்த வித்வான்.
திருமலை அனந்தாண்பிள்ளை. அக்காரக்கனி
ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமி, **M.A.**
ஸ்ரீகாஞ்சீ.



ஸ்ரீமதுபயவே. ஸ்ரீஸூக்திரத்நாகரம் இளையவில்லி.
சடகோபாசார்யர் ஸ்வாமி
ஆழ்வார் திருநகரி. (கோயில்)



ஸ்ரீமதுபயவேதாந்த ப்ரவர்த்தகர்களான திருநாங்கூர். பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரும், திருமலை அனந்தாண் பிள்ளை. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசாரியரும்.

(1) ஞானமுத்திரையோடு விளங்கும் திருநாங்கூர் ஸ்வாமி நியாய வேதாந்த வித்வான்; தற்காதம் அயோத்யாபுரியில் ஸ்ரீ ராமாநுஜ வேதாந்த மஹாவித்யாலயத்தில் வேதாந்த ப்ரவசனம் செய்துபோருகிறுர்.

(2) ஆபத்தபாணியாய் நிற்கும் சதாபிஷேகம்ஸ்வாமி வியாகரண வேதாந்த வித்வான். திருவரங்கம் பெரிய கோயிலில் பகவத்விஷய, ரஹஸ்யாதி ப்ரவசனம் செய்து போருகிறுர்.



ஸ்ரீமதுபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யரான கோயில் கந்தாடை அண்ணவிலப்பன் குமாரவேங்கடாசார்ய'. முதலியாண்டான் பெரியஸ்வாமி ஸ்ரீசைலாசார்ய ஸ்வாமி சென்னை சைதாபேட்டை திருப்பாவை ஸதஸ்ஸில் அக்ராஸனம் அலங்கரிக்க எழுந்தருளும் ஸமயம்

**புத்தூர் அக்ரஹாரம் ஸ்ரீமதுபயவே. S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L.**

**Advoeate ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிபர்.**



நம்முடைய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலவற்றையும், விசேஷித்துப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த வியாக்கியானதிகளையும் பரிஷ்க்ருதமான முறையில் அச்சிட்டு வருபவர். ப்ரக்ருதம் மணவாள மாமுனிகளின் அறுநூருண்டு மஹோத்ஸவ நினைவு மலராக ஸ்ரீவசநபூஷணத்தை இரண்டு வியாக்கியானங்களோடும் இரண்டு அரும்பதவுரைகளோடும் அநுபந்தங்களோடும் வெகு நேர்த்தியாக அச்சிட்டு வருபவர். இதில் நானூறு பக்கங்களுக்கு மேற்கொண்ட முதற்பகுதி வெளிவரவிருக்கிறது. வெளிவந்து விட்டதென்றே சொல்லலாம். இந்த மஹாக்ரந்தம் விரைவில் பூர்த்தியடைந்து மற்றும் பலபல மஹா க்ரந்தங்களும் இப்பெரியாருடைய விடாமுயற்சியினுல் வெளிவந்துகொண்டிருக்கப் பெரிய பெருமாளைப் பிரார்த்திக்கின்ருேம்.

## காஞ்சீபுரம் ஆடிடர் ஸ்ரீமான் A. K. ராஜகோபாலய்யங்காருடைய ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவ கோஷ்டி.



இந்த கோஷ்டியில் ஸ்ரீஉவே. முதலியாண்டான் ஸ்வாமிகளிருவரும் ஸேவை ஸாதிக்கின்றார்கள். ஸ்ரீமான் ஆடிடர் K.V. நரஸிம்ஹாசாரியர், M.A., G.D.A. F.C.A., கல்யாண தம்பதிகளின்பக்கத்தில் முதல்வராக நிற்பவர்.

## ஸ்ரீமதுயவே. திருக்கண்ணபுரம் (T.S.) ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி



இந்த ஸ்வாமி மீமாம்ஸா வியாகரண வேதாந்தங்களில் சிரோமணி பட்டம்பெற்றவர். நெடுங்காலம் சாஸ்த்ர ப்ரவசனம் செய்து விச்ராந்திபெற்று ஸமீபகாலத்தில் திருவல்லிக்கேணியில் திருநாடலங்கரித்தவர்.



ஸ்ரீகாஞ்சீ ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் திருவவதார மஹோத்ஸவ கோஷ்டி (1964)



பெரியஜீயராஸ்தானத்தை யலங்கரித்த ஸந்நிவேசம் இது.



ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரியகேள்வி ஜீயர்ஸ்வாமி (வர்த்தமாநர்)



(14-12-69) ஸௌம்யஹூ கார்த்திகைமீ முடிவில் பகற்பத்தில் கோயிலில் நடந்த உபந்யாஸ கோஷ்டியில் ஸேவைஸாதித்தருளும் ஜீயர் ஸ்வாமிகள் (1) ஸ்ரீமத் பரமஹம்ஸ காஞ்சீ வாதிகேஸரி. அழகியமணவாள யதீந்த்ரப்ரவண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி. (2) ஸ்ரீமந்பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி.



ஸ்ரீஉவ. K. E. ராஜகோபாலா-சாரியர், B.A., B.L., அட்வொகேட், (திருவல்லிக்கேணி)



ஸ்ரீஉவே. T. ஸ்ரீநிவாஸாசாரியர் (லிபர்ட்டி அச்சுக்கூடத் தலைவர்) சென்னை (நமது ஸம்ப்ரதாய க்ரந்தப் பதிப்பாளர்,



T. V. S. கம்பெனியில் தலைமைபெற்று விளங்கும் ஸ்ரீமான் T. A. திருவேங்கடாசாரியருடைய திருத்தமையனார் குணக்கரம்பாக்கம் தி. அ. கோபாலாசார்யஸ்வாமி 15—7—70ல் பரமபதித்து 27-7-70ல் நடைபெற்ற திருவத்யயன கோஷ்டி,



இதுவும் மேலே குறித்த ஸந்தர்ப்பத்தைச் சேர்ந்த சாத்துமுறை கோஷ்டி.



ஸ்ரீமதுபயவே. திருவிந்தளூர். பிரதிவாதிபயங்கரம் டாக்டர் அண்ணங்கராசாரியருடைய கனிஷ்ட குமாரன் ஸ்ரீநிவாஸனுக்கு ஸ்ரீஉவே. T. A. T. ஸ்வாமியின் கனிஷ்ட குமாரி ஸௌபாக்யவதி கமலவல்லியை (16-9-66ல்) திருமணம் புரிவித்த ஸந்தர்ப்பம். (இடம் மாம்பலம்) இந்த கோஷ்டியில் குத்துவிளக்கெதிரே ஸேவை ஸாதிப்பவர் (ஸ்ரீகாஞ்சீ.) திருமலை. ஈச்சம்பாடி வரதாசாரியர் ஸ்வாமி. நேற்று ஆவணிமாதத்தில் பரமபதித்தவர். T. A. T. ஸ்வாமியின் ஸாக்ஷாத் மாதுலர்.



(இதுவும் மேலே குறித்த விவாஹ ஸந்தர்ப்பம்)

இந்த கோஷ்டியில் ஸ்ரீ. அட்வகேட் P. B. அனந்தாசாரியர், அட்வகேட், K. V. பார்த்தஸாரதி ஐயங்கார், டாக்டர் P. B அண்ணங்கராசாரியர், திருப்பதி பரவஸ்து கோவிந்தாசாரி. (T. V. S.) T. A. T. ஸ்வாமிகள் காட்சி தருகிறார்கள்.



ஸ்ரீமதுபயவே. குணக்கரம்பாக்கம்
திருமலை. அனந்தாண்பிள்ளை
கிருஷ்ணமாசார்யர்ஸ்வாமி
(4—9—70ல் மயிலையில்
திருநாடலங்கரித்தவர்)

குணக்கரம்பாக்கத்தில் ப்ரஸித்தரா யெழுந்தருளியிருந்த திருமலை அனந்தாண்பிள்ளை வெங்கடாசார்யஸ்வாமியின் த்விதீய குமாரர். கீழே பன்முறை ப்ரஸ்தாவித்த நம் T. A. T. ஸ்வாமியின் சிறிய தகப்பனார். காஞ்சீ P B. ஜகத்குரு அனந்தாசார்ய ஸ்வாமிக்கு வெகுகாலம் தக்ஷிணபாஹுவாக எழுந்தருளியிருந்தவர்.





தேவப்பெருமாள் ஸன்னிதி கோபுரவாசலில் பங்குதி விசாகத் திருவீதி கோஷ்டி





முன்பக்கத்தில் பிரஸ்தாவித்த ஸ்ரீக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிக்கு 16—9—70ல் நடைபெற்ற திருவத்யயன கோஷ்டி. இந்த ஸ்வாமியின் சரம கைங்கரியம் நம் T. A. T. ஸ்வாமிக்கு ப்ராப்தமான படியால் அவரே திருப்பரிவட்ட மாலை மரியாதைகளுடன் மேலே கைகூப்பி நிற்பவர்.

இது திருவீதி கோஷ்டி.



ஸ்ரீமதுபயவே. நியாயவேதாந்தவித்வான்
காரப்பங்காடு. வேங்கடாசார்யஸ்வாமி



ஸ்ரீமதுபயவே. பிள்ளைபாக்கம் பஹு குடும்பி
அனந்தாசாரியர் ஸ்வாமி, அட்வகேட், சென்னை.
Sri P. B. Ananthacharya, Advocate, Madras.



தேவப்பெருமாள் வைகாசி [illegible]த்ஸவம் ஆறுவது திருநாள் ஸன்னிதிவீதி இயல்கோஷ்டி 1969



ஸ்ரீமதுபயவே[illegible]ப. வித்வான்,
வாகம்ருதவர்[illegible]ஷீ. வேளுக்குடி
வரதாசா[illegible]ர்யஸ்வாமி



வைகுண்டவாஸியான பிரபல அட்வகேட்
V. ராஜகோபாலாசாரியார் M. L. ஸ்வாமியின்
திருவத்யயனகோஷ்டி. கோயில் கந்தாடை
அப்பன் உவே. ராமாநுஜாசாரியார்
ஸேவைஸாதிக்கிருர்.



ஸ்ரீ உவே ஆசால் சேஷாசாரியர், B.A.,B.L.,
அட்வகேட் (வைகுண்டவாஸி)

ஸ்ரீ:

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்,



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவு நினைவுமலராக

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கரார்ய தாஸனால் விஜ்ஞாபனம் செய்யப்பட்ட

# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர பக்தாம்ருதம்

ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

ஸாதாரண௵ ஐப்பசித்திருமூலம்



3-11-1970

# ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர பக்தாம்ருதம்.

நம்முடைய ஆசார்ய பரம்பரையானது முனிவரால் தொடங்கப்பெற்று முனிவரால் முடிவு பெற்றுள்ளது. நாதமுனிகளால் தொடங்கப்பெற்று மணவாள மாமுனிகளால் முடிவுபெற்றதென்கை. ஆழ்வார்களுக்குப் பிறகு நெடுங்காலங் கடந்தபின் ஸ்ரீமந் நாதமுனிகளே ஸ்ரீவைஷ்ணவதர்சனப்ரவர்த்தகராகத் தோன்றினவர். அப்போது அங்குரிதமாயிருந்தவது ஆளவந்தார் எம்பெருமானுர் ஆழ்வான் பட்டர் நம்பிள்ளை பிள்ளை லோகாசாரியர் போல்வார் காலத்தில் பல்லவிதமாய் கோரகிதமாய் புஷ்பிதமாயிருந்து மணவாள மாமுனிகளின் காலத்தில் தழைத்தோங்கிப் பலபர்யந்தமாயிற்று.

மணவாள மாமுனிகளை முதலிலோ இடையிலோ அவதரிக்கச் செய்யாமல் முடிவிலே அவதரிக்கச் செய்தருளின முகில்வண்ணனுடைய ஸாமர்த்தியம் ஒப்புயர்வற்றதென்னவேணும். ஆளவந்தாரை நோக்கி 'தேவரீருக்கு ஸ்ரீபாஷ்யம்' தெரியுமோ!' என்று வினவினுல் 'அப்படியொருக்ரந்தமிருப்பதாகவே அறியேனே! என்று விடையிறுப்பர். எம்பெருமானுரை நோக்கி 'ஸ்வாமிக்கு பஞ்சஸ்தவாதிகளும் ஈடுமுப்பத்தாருயிரமும் தெரியுமோ?' என்று கேட்டால் தெரியுமென்ன ப்ரஸக்தியில்லையே. நம்பிள்ளையை நோக்கி 'தேவரீருக்கு ச்ருதப்ரகாசிகையும் அஷ்டாதசரஹஸ்யமும் தெரியுமோ?' என்று கேட்டால் தெரியுமென்னமாட்டாரே. பிள்ளை லோகாசார்யரை நோக்கி ஆசார்யஹ்ருதயமறிவீரோ? என்ருல் அறியேனென்று தானே அருளிச்செய்வர்.

இனி மணவாள மாமுனிகள் திறத்து வந்தால் "பண்டு பலவாரியரும் பாருலகோருய்யப் பரிவுடனே பணித்தருளும் பல்கலைகள் தம்மைக்,கண்டதெல்லாமெழுதியவை கற்றறிந்தும் பிறர்க்குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக்கழித்தேன்" என்றும், "முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்ருேம் முழுது நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்ருேம். பின்னையொன்றுதனில்நெஞ்சு பேராமல்பெற்ருேம்" என்றும் (ஆர்த்திப்பிரபந்தத்தில்) தாமே யருளிச்செய்யுமாறு கடல் சூழ்ந்த மண்ணுலகில் ஸர்வஜ்ஞரென்னத் தக்கவர் ஸ்வாமி யொருவரேயாவர். அந்த ஸர்வஜ்ஞத்வம் கையிலங்கு நெல்லிக்கனியாம்படி திவ்ய ஸ்ரீஸூக்திகளை யருளிச் செய்தவரும்-ஒத்தாரும் மிக்காருமில்லாதபடி ஸ்வாமி யொருவரேயாவர்.

முன்னம் பரஸ்துதரான ஸ்ரீமந் நாதமுனிகள் "ஆதுமில்காலத்தெந்தை" என்னலாம்படி ஸ்வரூபோசிதப்ரமாண க்ரந்தம் ஏதுமில்லாதிருந்த காலத்திலே அருந்தவம் புரிந்து அருளிச்செயல்களைப் பெற்றபோது தாம் வாய் திறந்தொன்று பணிக்க நினைத்து *பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்* என்ருர். பக்தாம்ருதத்தைத் தாம் பெற்ருர். அது பகவத் விஷயமாகப் பெற்றவம்ருதம். அங்ஙனன்றிக்கே, ஆசார்ய ஸார்வபௌமர் விஷயத்திலே ஒரு பக்தாம்ருதம் விண்ணப்பம் செய்ய விரும்பியவடியேன் "கேட்டறியாதன கேட்கின்ருேம்" "கண்டறியாதன காண்கின்ருேம்" என்று அநஸூயுக்கள் அகமகிழ்ந்து பேசும்படி பல அம்ருததாரைகள் மலிந்த அம்ருதகும்பமானவிதனை விண்ணப்பஞ் செய்து க்ருதக்ருத்யனுனேன். இது, முதலில் ஸம்ஸ்க்ருத நூலாக விண்ணப்பம் செய்யப்பட்டது. ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரஷட்சதி யென்னும் பெயர் பூண்டவது தேவநாகரலிபியில் அச்சிடப்பட்டு இன்றே வெளிவந்துலவுகின்றது. அதற்குக் கருத்துரையானவிது தமிழறிஞர்களால் அநுபவிக்கத்தக்கது. இரண்டையும் சேர்த்து அநுபவிப்பவர்கள் பாக்யசாலிகள். (*)

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்



மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

மணவாளமாமுனிகள் விஷயமான அறுநூற்றுப்பன்னிரண்டு சுலோகங்கள் கொண்ட

# ஸ்ரீமத் வரவர முநீந்த்ர ஷட்சதீ

பதினாறு ஸ்தோத்ரங்கள் கொண்டவிதில் முதல் ஸ்தோத்ரம்.

# ஸ்ரீசைலேசதயாபாத்ரஸ்தோத்ரம்

ஸம்ஸ்க்ருத ச்லோகங்கள் தனியே அச்சிடப்பட்டுள்ளன. அந்த சுலோகங்களினடைவே பொழிப்புரை இது.

இந்தஸ்தோத்ரத்தின் ப்ரக்ரியை எப்படிப்பட்ட தென்றால்; ஸ்ரீசைலேச என்பதற்கு, சகார-ரேப-ஈகார, சகார-ஐகார, லகார-ஏகார, சகார-அகார-என்றுவர்ணக்ரமம் சொல்லுவோம்; இதேரீதியில் ஸ்ரீசைலேசதயாபாத்ர சுலோகத்திற்கு வர்ணக்ரம அடைவில் ஒவ்வோரெழுத்தை ஆதியாகவைத்து: இந்த ஸ்தோத்திரம் அமைக்கப்பட்டிருக்கிறது.

1. (சம் நோ மித்ரः.) * சம் நோ மித்ர: * என்றும் * சம் நோ பவத்வர்யமா* என்றும் சொல்லுமவர்கள் அப்படியே சொல்லிக் கொண்டிருக்கட்டும் : அடியேனுக்கு அத்தகைய உக்திகளில் சிறிதும் ஆஸ்தையில்லை ; * சம் நோ ரம்யவரோபயந்த்ருயமிராட் பூயாத் * [மணவாள மாமுனிகளே நமக்கு க்ஷேமங்கரராகக் கடவர் என்னுமிந்த ருக்கையே எனது நாக்கு அநவரதம் ஆவ்ருத்திசெய்யும்.

2. ( ரங்கம் ரங்கம். ) *ரங்கம் ரங்கமிதி ப்ரூயாத் க்ஷுதப்ரஸ்கலநாதிஷு* என்கிற சாஸ்த்ரத்தை யடியொற்றி இருமல் தும்மல்களில் ரங்கம் ரங்கமென்பாரும், ஆசார்ய நாம ஸங்கீர்த்தநமே உத்தேச்ய மென்று கொண்டு 'ராமாநுஜ! என்பாரும், கசவா ! மாதவா ! என்று பகவந்நாம கீர்த்தநம் பண்ணுவாரும் இவ்வுலகில் பலர் இருக்கட்டும். அப்படிப்பட்ட கீர்த்தனங்கள் என்காதில் விழவே வேண்டா: மணவாளமாமுனிகளென்கிற திருநாமமே எனக்குக் கர்ணாம்ருதமாகும்.

3. (ஈசாநோபி ) "சிவன் பிரமன் இந்திரன் ஸூர்யன் இவர்கள் ஒருவரும் தெய்வமன்று, ஸ்ரீமந் நாராயணனே பரதெய்வம்" என்று வைதிகர்களின் ஸித்தாந்த மிருந்தாலும் அடியேனுள்ளத்திற் பதிந்த ஸித்தாந்தம் மணவாளமாமுனிகளே பரதெய்வமென்பதாம்.

4. (சக்தோ நைவ.) எம்பெருமானே பரதெய்வமென்று கொண்டாடப்பட்டாலும் அப்பெருமான் செவிக்கினிய செஞ்சொற்களாலே விவேகிகளின் மனத்தைக் கவர வல்லவனல்லன்: ஏன்? ஸ்ரீ விஷ்ணு புராணம் பகவத்கீதை முதலியவற்றில் அப்பெருமானருளிச் செய்த திவ்ய ஸூக்திகள் பல இல்லையோ வென்னில். வ்யாஸ பராசராதி மஹர்ஷிகள் எதையோ எழுதிவைத்து பகவத்வாக்யமாக நம்மை வஞ்சிக்கிறார்களத்தனை; மணவாளமாமுனிகளோ வென்னில் அப்படியல்லாமல் நேராகத் திருவவதரித்தருளி அமுதமன்ன மென்மொழிகளைத் தாமேயருளிச்செய்து அறிஞர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றார்.

5. (ஐச்வர்யம்.) சிலர் லக்ஷ்மீகடாக்ஷத்தாலாகும் சிறிது செல்வத்தைப்பெற்றுத் தங்களை ஒப்பற்றவர்களாக மதிக்கின்றார்கள்; அந்த அழியுஞ் செல்வத்தினால் என்னாகும்? உபயவிபூதியிலும் நித்யபோக்யமும் எல்லையற்றதுமான நிதி அடியேனுக்குக் கிடைத்திருக்கின்றது; அந்த நிதிக்கு மணவாளமாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியென்று பெயர்; அப்படிப்பட்ட நிதியைப் பெற்றுள்ள அடியேனே மிகவும் தன்யன்

6. (லக்ஷ்மீச:) எம்பெருமான் முன்பு இராமபிரானும் கண்ணபிரானும். அவதரித்து விச்வாமித்ரர் ஸாந்தீபிநிபோல்வாரிடத்தில் சிஷ்யனாயிருந்து, அவர்கள் ஜிதேந்த்ரியர்களன்றிக்கே நித்யஸம்ஸாரிகளா யிருக்கும்படியைப் பிறகு தெரிந்து கொண்டு அந்தோ! ஆசார்யத்வ பூர்த்தியில்லாத இவர்களையா நாம் ஆசார்யராக வரித்தோமென்று எம்பெருமான் திருவுள்ளம் வெறுப்புற்றே யிருந்தது. அக்குறையை அர்ச்சாவதாரத்தில் தீர்த்துக்கொள்ள விரும்பி ஒரு நாளும் விடவொண்ணாத ஆசார்யரைப் பெற விரும்பி ஆசார்யத்வ பூர்த்தியுடைய மணவாளமாமுனிகளை ஆசார்யராக வரித்து க்ருதக்ருத்யனாயினன்.

7. (ஏஷஸ்ரீவரயோகி.) மணவாளமாமுனிகளுக்கு விசதவாக் சிகாமணியென்கிற விருது ப்ரஸித்தமானது; உண்மையில் இந்த விருது இவரொருவர்க்கே தகுமேயன்றி மற்றெவர்க்கும் ஏற்காது. ஏனெனில், ஸந்தேஹிக்க இடமில்லாமலும் விபரீதார்த்தங்கொள்ள வொட்டாமலும் வீண்வம்புவார்த்தைகளுக்குச் சிறிதும் இடமளிக்காமலும் மிகவும் லலிதமாய் பரமபோக்யமான ஸ்ரீஸூக்திகள் நிரம்பிய வியாக்கியானங்களை அருளிச் செய்தவரென்கிற புகழ் மாமுனிகளுக்கே அஸாதாரணமாய் விளங்குமதன்றோ.

8. (ஏதத்பத்ய.) எனது செவிக்கினியதோர் செஞ்சொல்லைக் கேண்மின்; மணவாளமாமுனிகளின் மதுரமான ஸ்ரீஸூக்திகளை இடைவிடாது ஸேவித்துப் பாருங்கள்: அவரைப் போன்ற வோராசிரியர் இதுகாறும் இந்நிலவுலகில் அவதரித்ததுண்டா? இனியாகிலும் அவதரிக்க முடியுமா வென்று, நன்மதியுடையீர்! நீங்களே சிறிது சிந்தித்துப்பாருங்கள்.

9. (சாந்திர் தாந்தி:) சமம் தமம் முதலிய ஆத்மகுணங்கள் சேதநர்களுக்கு அவசியம் வேண்டியவையென்றும் அவரவர்கள் தங்கள் நூல்களில் கம்பீரமாக எழுதி வைக்கிறார்கள். ஆனால், அந்தத் திருக்குணங்களுக்குக் கொள்கலமான ஆசிரியர் யாவர்? என்று சிலர் சிந்திக்கப் புகுந்தால் அவர்களின் உள்ளத்தில் மணவாளமாமுனிகளே குடிகொண்டிருக்கக் கூடியவர், மாமுனிகளைப் போன்ற சமதமஸம்பந்நர் வேறொருவருமிலர்.

10. (அந்தர்வாணி·) அஸூயை யற்ற வித்வான்களை அடிபணிந்து ஒன்று விண்ணப்பம் செய்கிறேன்; நீங்கள் பல பல ஆசாரியர்கள் இயற்றிய பல நூல்களைப் பார்த்திருக்கிறீர்களே; மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலுள்ள இன்சுவை எந்த ஆசிரியருடைய திருவாக்கிலாவது கண்டதுண்டா? உள்ளவாறுரையீர்.

11. (தம்பம் கேவலம்) சில ஆசாரியர்கள் தங்கள் வாக்கினால் டம்பத்தைமாத்திரமே வெளியிட்டுக் கொள்ளுகிறார்கள். அவர்களுடைய வாக்குகளில் பெரும்பாலும் பரநிந்தை தவிர வேறு என்ன காணமுடியும்? நீறுபூத்த நெருப்பு என்னும் படியான மணவாளமாமுனிகள் ஒருவரே பரநிந்தாதிதோஷ லேசமுமற்ற பரம போக்ய ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்தவர்.

12. (அந்தர்மாநஸம்) மற்றையோர்கள், நெஞ்சில் ஒன்றைவைத்துக் கொண்டு வாக்கில் வேறொன்றை வெளியிடுபவர்களாய் நூல்கள் எழுதிப் போருவர்கள்; பெரும்பாலும் அவர்கள் வஞ்சிக்க வல்லவர்கள்; அப்படிப்பட்ட துர்க்குண லேசமும் அற்றவரான மணவாளமாமுனிகள் ஸ்ரீரங்கநாதனுடைய தவப்பயனாகத் தோன்றினவர்: அவர் எப்போதும் பக்தர்களின் உள்ளத்துள்ளே உறைபவர்.

13. (யஸ் ஸர்வஜ்ஞ:) (இந்தச்லோகத்தில் ஏழு வேற்றுமைகளும் வரிசையாக வரும்படி தொடையழகு காண்க.) எவர் ஸர்வஜ்ஞரென்று புகழ்பெற்றாரோ, எவரை ஸ்ரீரங்கநாதன் ஆசார்யராகக் கொண்டானோ, எவரால் ஸ்ரீராமாநுஜதர்சநம் காக்கப்பட்டதோ, எவர்பொருட்டு நமஸ்காரம் நன்மைபயக்குமோ, எவரைக்காட்டிலும் மேம்பட்ட ஆசாரியர் இல்லையோ, எவருடைய தனியன் இவ்வுலகில் எஞ்ஞான்றும் வெற்றிபெற்று விளங்குமோ, எவரிடத்தில் ஸகல திருக்குணங்களும் பொருந்தியுள்ளனவோ அந்த மணவாளமாமுனிகளைப் போற்றுகிறோம்.

14. (ஆகாரம் வர) மணவாளமாமுனிகளின் பாற்கடல் போன்று பரமபோக்யமான திருமேனியை அடியேன் எப்போது ஸேவிக்கப்பெறுவேனென்று நெடுநாளாகக் கண்ணீர் விட்டழுது நைந்துகிடந்தேன்; அங்ஙனே துவண்டு கிடந்த அடியேனுக்கு மாமுனிகள் ஐயோவென்றிரங்கி அருள்செய்தபடியை என் சொல்லுவேன்? எனக்குப் பெரும் பேறு பெறுவித்தவரான அவரே மஹான்.

15. (பத்த்யம் கிஞ்சந) காதோடு ஒரு இன்சொல் சொல்லுகேன் கேண்மின்! பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த தத்வத்ரயத்திற்கு மிகச்சிறந்த வியாக்கியானத்தை யருளிச்செய்து தம்முடைய ஸர்வஜ்ஞத்வத்தை விளங்கக் காட்டியருளின மணவாளமாமுனிகளையே அநவரதம் சிந்தை செய்மின்; வேறுவழியால் ஜன்மம் க்ருதார்த்தமாக விரகில்லை.

16. (ஆகாசே) சிறுவர்கள் (அவிவேகிகள்) சேற்றையெடுத்து ஆகாசத்தில் விட்டெறிந்தால் என்னுகிற தென்பதை அனைவரும் காணத் தட்டில்லையே. மணவாளமாமுனிகள் விஷயத்திலும் இந்த நியாயமே காணத்தகும். கருவிலே திருவிலாதார் மாமுனிகளின் அமுதமொழிகளில் தூஷணைகளைப் பிதற்றுவது அவர்களுக்கே அநர்த்தத்தை விளைக்குமதாம்.

17 (தம் தம் தேசிகம்) உலகில் புத்திமான்கள் அந்தந்த ஆசாரியரைத் துதிக்கும் போது "மற்ற ஆசாரியர்களை விட்டு இவ்வாசிரியரையே தொழுங்கள்" என்று சொல்லுவதுண்டு; அடியேன் மணவாளமாமுனிகளைத் துதிப்பது அந்த முறைமையில் அல்ல; உண்மையில் மாமுனிகளைத் தவிர வேறு ஆசாரியர் இல்லை யென்று ஆணையிட்டுரைப்பேன்.

18.(ரங்கீ யஸ்ய) ஸ்ரீரங்கநாதன் யாவரொரு மணவாளமாமுனிகளின் திருக்குணங்களை நெடுநாள் ஆராய்ந்து நோக்கி சிஷ்யனானே அந்த மாமுனிகளுக்குப் பிறகு வேறொரு ஆசாரியர் இருக்கக் கூடாதென்று அவரோடு ஆசார்ய பரம்பரையை ஸமாப்தி செய்துவிட்டான்; (அதாவது) பூருவாசாரியர்கள் என்கிற வியபதேசம் மாமுனிகளோடு முற்றுப்புள்ளி யடைந்திட்டது. இவ்விஷயம் உலகமெல்லாம்அறிந்ததேயாதலால் மாமுனிகளுக்கு மேற்பட்ட ஆசார்யர் இல்லையென்று அடியேன் துணிந்து கூறுகின்றேன்.

19. (அத்யாச்சர்ய) பிள்ளைலோகாசார்யரின் திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்யஹ்ருதயமென்னும் திவ்ய க்ரந்தத்தை உலகம் நிறைந்த புகழாளரான மணவாளமாமுனிகள் வியாக்கியானித் தருளினர்; பரமபோக்யமான அந்த வியாக்கியானத்தை இடைவிடாதுஸேவித்தால் ஸர்வஜ்ஞராகப் பெறலாம்.

20 (மந்தாநாமபி) அறிவிலிகளுக்குங்கூட நிகரற்ற ஸந்தோஷத்தை விளைக்கவல்ல பல ஸ்ரீஸூக்திகளைத் தமது நிர்ஹேதுக க்ருபையினாலேயே யளித்து உலகத்தை உய்வித்தருள்பவரான மணவாளமாமுனிகள் திருவாய்மலர்ந்தருளிய யதிராஜவிம்சதியைக் கண்டபாடம் செய்து ஸதா அநுஸந்தியுங்கள்.

21. (தந்யாஸ் ஸ்யாம) எப்போதும் நாம் பாக்யசாலிகளாகவே யிருக்க வேணுமென்னும் விருப்புடையீர்! கேண்மின்; மணவாளமாமுனிகளருளிச் செய்த வியாக்கியானத்தோடு கூட ஸ்ரீ வசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தை ஆசார்ய ஸந்நிதியில் அடிக்கடி ஸேவியுங்கள்; இதுவே பரமபாக்யம்; இதற்கு மேற்பட்ட பாக்யமில்லை

22. (ஈர்ஷ்யாதுர்க்குண) *பிறர்மினுக்கம் பொறாமையிலாப் பெருமைபெற்று சமதமக்கடலாக விளங்குகின்ற மணவாளமாமுனிகளை விட்டு வேறொரு ஆசார்யரை ஆச்ரயிக்கின்றவற்கு என்னத்ருப்தியுண்டாகும்? அன்னவற்கு ஆயுள் முழுவதிலும் உண்மைப்பொருள்களை யுணர்வதற்கு ப்ரஸக்தியில்லையாகுமன்றோ.

23. (பங்கோநைவ) மணவாளமாமுனிகளின் தனியனுக்கு இப்பூமண்டலத்தில் ஓரிடத்திலும் ஒருபோதும் பங்கம் விளைவதில்லையென்கிற (இந்தத்தத்துவத்தை நன்கு உணரவல்ல மஹான்களின் மனத்தில் மாமுனிகள் தவிர மற்றொரு ஆசாரியர் திருவடிவைக்கமுடியுமோ? அஸூயை யற்றவர்கள்இதனை ஆராய்ந்துணர்க.

24. (அந்யாய்யார்த்த) சிலர் தங்கள் சுவடிகளில் தப்பான அர்த்தங்களையே கூசாமல் பெரும்பாலும் எழுதிவைத்து, அவ்வளவோடும் நில்லாமல் "இதில் தப்பான அர்த்தம் ஒன்றுகூட இல்லை; எல்லாம் மஹாப்ராமாணிகமான அர்த்தமே எழுதிவைத்தோம்" என்றும் ஊடே யூடேயெழுதி உலகத்தை வஞ்சித்துக் கீர்த்தி

பெறுவாருளர் ; அன்னவர்கள் கிடக்க ; மணவாள மாமுனிகளொருவரே பிரா மாணிகர்களில் தலைவர்.

25. ( கச்சிந்மாமிஹ ) கீதையில் கண்ணபிரான் *கச்சிந்மாம் வேத்தி தத்வதঃ* என்று என்றைக்கோ சொல்லி வைத்தான்; 'தன்னை யுள்ளபடி யறியவல்லவர் யாரேரோவொருவர் ' என்று சொன்ன அந்தகீதையின்படி மணவாளமாமுனிகளொரு வரே தத்வஜ்ஞராகத் திருவவதரித்தவர் ; அவருடைய ஸ்ரீஸூக்திகளில் ப்ராவண்ய முடையோமுக்கும் தத்வஜ்ஞபாவனை உரியதேயாம்.

26. ( தர்க்கவ்யாகரண. ) தர்க்கம் வியாகரணம் முதலான ஸகல சாஸ்த்ரங் களிலும் நிகரற்ற பாண்டித்யத்தை ஸ்பஷ்டமாகக் காட்டவல்ல வியாக்கியானங் களை யருளிச் செய்தவரான மணவாளமாமுனிகள் திருவாய் மலர்ந்தருளிய நிகரில் புகழ் வாய்ந்த முமுக்ஷுப்படி வியாக்கியானத்தை நெஞ்சே ! இடையறாது அநு ஸந்திப்பாயாக.

27. (ய்ஸ்ய ஸ்வாது ) தம்முடைய பரமமதுரமான ஸ்ரீஸூக்திகளில் தமது பரமப்ராமாணிகத்வத்தை விளங்கவைத்தவரும், குடில புத்தியின்றிக்கே ருஜு புத்தியாயிருப்பவரும், பிள்ளை யுலகாசிரியருடைய ஸ்ரீஸூக்திகளைக் காக்கவே அவ தரித்தவரும், ஸ்ரீரங்கநாதனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவருமான மணவாளமாமுனிகள் எனது உள்ளத்துள்ளே யுறைகின்றார்.

28. ( ஆதாவாதி, ) முதலில் ஆதிசேஷனாயிருந்து பிறகு இளையபெருமாளாக வும் அதன்பிறகு எம்பெருமானாராகவும் அதற்குப்பிறகு மணவாளமாமுனிகளாகவும் இங்ஙனே அடைவே திருவவதாரமாயிற்றென்று ஸத்துக்கள் உண்மையுணர்ந்து பேசப்பெற்ற மாமுனிகள் அடியேனுடைய அகவிருளைப் போக்கியருளினார்.

29. ( தக்ஷாஸ்ஸந்தி ) ஆச்சரியமான பந்தங்களுடன் கூடின பல கவிதைகளைச் கணப்பொழுதில் இயற்றவல்ல கவிச்ரேஷ்டர்கள் பலர் இவ்வுலகிலுளர்; இது கிடக் கட்டும். அவற்றால் என்னபயன் ? அவையெல்லாம் ஒன்றுகூடினாலும் மணவாள மாமுனிகளின் அமுதமென்மொழிகளில் ஒரு அக்ஷரத்திற்கு இணையாகாவென்பது ஸத்யம்.

30. (இந்தே ஸந்ததம்) மணவாளமாமுனிகள் பாற்கடல் போன்ற தமது திரு மேனியொளியை என்னெஞ்சினுள்ளே விளங்கக் காட்டியருளா நின்று கொண்டு ஸேவைஸாதிக்கின்றார். கனவிலுங் காண வரிதான அத்திருமேனி விளக்கத்தைப் பாவியேன் நனவிற்காணுமாறு அருள்செய்த அதிசயம் என்னே.

31. (கச்சேயம் யதி) ஒருகால் அடியேன் பரமபதத்திற்குச் செல்வேனாயின் அங்கும் மணவாளமாமுனிகளின் திருவடி வாரத்திலேயே ஸகல கைங்கரியங்களை யும் செய்துகொண்டு அவருடைய மதுர ஸ்ரீஸூக்திகளையே அநுபவித்துக்கொண்டு வாழக்கடவேன்; இல்லையாகில் ஸூர்ய மண்டலத்தைப் பிளந்து கொண்டு மீண்டும் இந் நிலவுலகுக்கே வந்து விடுவேனென்பது திண்ணம்.

32. (உர்வ்யாமத்ர) இவ்விருள் தருமாஞாலத்தில் பிறப்பு வெறுக்கத்தக்க தென்று பெரியார்கள் கூறுகின்றார்களெனினும் அது அடியேனுக்கு ருசிக்கவில்லை;

ஏனெனில், அடியேன் இவ்வுலகில் இருந்துகொண்டும் மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்தி யமுதத்தையே பருகிக்கொண்டு எப்போதும் ஆனந்தசாலியாகவே யிருக்கிறேனன்றோ! (துன்பமுண்டானாலன்றோ உலகவாழ்க்கை வெறுக்கதக்கதாம்).

33. (உக்தம் யத்) நம்மாழ்வார் தமது திருவாய்மொழியில் "கலியுங்கெடுங் கண்டுகொண்மின்" என்றருளிச்செய்தது எம்பெருமானாரை நோக்கி யென்பர்கள் அவ்வெம்பெருமானார் தாமே மீண்டும் மணவாளமாமுனிகளாகத் திருவவதரித் தருளிக் கலி வித்வம்ஸநமாகிற ஸ்வக்ருத்யத்தைக் குறையறச் செய்து தலைக்கட்டி அவ்வாழ்வார் ஸ்ரீஸூக்தியை யதார்த்தமாக்கி யருளினார்.

34. பாணிநி முனியின் சாஸ்த்ரமான வியாகரணத்தில் விபரீதங்கள் பல காணப்படும். ந- காரம் ண-காரமாய் மாறிவிடும், ஸ- காரம் ஷ-காரமாய்மாறி விடும். 'ப்ர—நயதி, ப்ரணயதி, வி—ஸஹதே, விஷஹதே. இத்யாதிகள் காண்க. மண வாளமாமுனிகளின் திருவாக்குக்களில் இங்ஙனே ஒரு விபரீதங்கூடக் காணமுடி யாது. எதுவும் யதாவத்தாகவேயிருக்கும். இது சாடுக்தி.

35. (ஆவேசம்) பொய்கையார் முதலான ஆழ்வார்களனைவரும் ஸ்ரீமந்நாத முனிகள் முதலான ஆசார்யர்களனைவரும் மணவாளமாமுனிகள் பக்கலில் ஆவேசித் தனர் என்னலாம், அல்லது, வடமொழி தென்மொழி மறைகளின் பாக்யஸர்வஸ் வமும் ஒன்றுசேர்ந்து மாமுனிகளாக வடிவு பூண்டு உதித்தது என்று நிஷ்கர்ஷிக்கத் தட்டில்லை.

36. (ரங்காதீச்வர) ஸ்ரீரங்கநாதனுடைய பாக்ய பரம்பரையே மணவாளமாமுனி களென்கிற திருநாமங் கொண்டு உலகில் அவதரித்தது என்கிற ப்ரதிபத்தியே அடி யேனது நெஞ்சில் கொழுந்துவிட்டோங்குகின்றது; இவ்விஷயத்தில் அதிகமான உப பத்தியிருப்பதால் இதுவே திடமான ஸித்தாந்தமாக வடுக்கும்.

37. (ணத்வம் பாததே.) மஹாபண்டிதரென்று புகழ் பெற்ற அப்பயதீக்ஷிதர் நாரா யண நாமத்தை சிவபரமாக நயிப்பிக்கவேணுமென்று சிரமப்பட்டு 'ணத்வம் பாதிக்கிறது' என்றுசொல்லிக் கைமொழிந்தார் என்பது ப்ரஸித்தமான விஷயம்; அவர்க்கு ஸ்ரீமந் நாராயணனிடத்தில் இருந்த த்வேஷம் உலகமறிந்ததே. அதனால் நாராயணனுக்கு ஒருகுறைவு நேர்ந்ததாகவில்லை. இதுபோலவே, வித்வான் களென்று பேர் படைத்த பிறர்கள் மணவாளமாமுனிகளிடத்தில் மாத்ஸரியம் கொண்டாலும் அதனால் குறையொன்றுமில்லை; அன்னவர்கள் படும் பாடு சொல்ல வேணுமோ?

38. (அல்பீயாநஹம்) உலகம் நிறைந்த புகழாளரான மணவாளமாமுனிகளை பக்தியிற் சிறந்த மஹான்கள் துதிக்கவேணுமே யன்றி நீசனேன் நிறையொன்று மிலேன் துதிப்பது தகுதியே யன்று; ஆயினும் அடியேன் ஓயாமல் அவரையே துதித் துக்கொண்டிருக்கிறேன்; இதற்காக நான் சிறிதும் வெட்கப்படுகின்றிலேன்; ஏனெ னில், மாமுனிகளின் ஸகலவைபவங்களையும் உள்ளபடி யுணர இவ்வுலகினுள் அடி யேனொருவனே பாக்யம் பெற்றேனன்றோ.

39. (வல்லீதுல்ய) வல்லிசேர் நுண்ணிடை மாதர்களோடு அணைவதனால் இன்பமுள்ளதென்று நீசர்கள் நினைக்கிறார்கள். அவர்களுக்கு இன்பமிருக்கலாம்; ஆனால் அது மிகவும் அற்பமானது; ஸ்ரீரங்கநாதனுக்கு ஆசார்யராக அமைந்த மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி ஸாகரத்தில் ஆழ்ந்து அமிழ்ந்து உலகிலுள்ள ஸகலவித போகங்களாலும் விளையக்கூடிய ஸகலவிதமான இன்பங்களையும் நுகர்வோம் யாம்

40 (அந்யாந்யேஷு) உலகில் ஒவ்வொருவர்க்கும் லௌகிகமான பலபலகாரியங்களிருப்பதால் அவற்றில் போது போக்கநேர்ந்து அதிககாலம் வீணாகவே கழிந்து போகிறது; மணவாளமாமுனிகளே! அடியேனுக்கு அப்படியல்லாமல் தேவரீருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளிலேயே ஸகல காலமும் செல்லும்படி அருள்புரிய வேணுமென்று திருவடிவாரத்தில் வேண்டிக்கொள்கிறேன்.

41. (மஞ்ஜீராஞ்சித.) மாதர்கள் பாதச்சிலம்பு அணிந்துகொண்டு நடந்து செல்லுமளவில் அச்சிலம்பொலி கேட்டு மயங்கிப்போவாருமுளர்; அதுகிடக்க; மணவாளமாமுகளின் தனியனை கோஷ்டிகளில் உரக்க அநுஸந்திக்கும்போது உண்டாகும் த்வநி விசேஷத்தைக் கேட்குமளவிலே அடியேன் வ்யாமோஹித்திருக்குமது ஸுப்ரஸித்தம்.

42. (யஸ்ய ஸ்யாதிஹ) மணவாளமாமுனிகளின் பரமபவித்திரமான திருக்கோலத்தைச் சிந்தைசெய்யும் பாக்கியமுடையார்க்கு எம்பெருமானார் தரிசனத்தில் நல்ல உணர்ச்சி விளையும். ஸகல தத்துவங்களையும் உள்ளபடி யுணரவல்ல யோக்யதை அவர்கட்கே உரியதாகும்.

43. (யத்பப்யத்ர) இவ்வுலகில் நம்மாழ்வார் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் பட்டர் முதலான ஆசாரியர்களும் நம்முடைய பக்திக்குப் பாத்திரமாகக் கூடியவர்களாக விளங்குகின்றார்களெனினும், அடியேனுக்கு விசதவாக் சிகாமணிகளான மணவாள மாமுனிகளிடத்தில் மாத்திரமே விலக்ஷணமாய் நவம் நவமான பக்தி ஒளிர்கின்றது.

44. (அத்வாநம்) மணவாளமாமுனிகள் காட்டியருளின பத்ததியைப் பற்றினவர்களுக்குத் தத்வார்த்தங்களில் தூய நன்மதி விளங்குவது ப்ரஸித்தம்; தௌர்ப்பாக்ய வசத்தாலே அந்த நல்வழியில் விமுகராயிருக்குமவர்கள் படும் பாட்டை என் சொல்வேன்? அன்னவர்களின் பிறவியே வெறுக்கத்தக்கது.

45 (தந்யாந்நிஸ்துல) மணவாளமாமுனிகள் தம்முடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் விமுகராயிருப்பார்கட்கும் அன்பு உண்டாகும்படி கடாக்ஷித்தருளவேணுமென்று அடியேன் வேண்டிக் கொள்ளுகிறேன். ஏனெனில் ஸ்ரீவைஷ்ணவர்களாகப் பிறந்து மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் மாச்சரியங் கொண்டிருந்தால் அவர்களுக்கு இடையறாத துர்க்கதிகளன்றோ நேரும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு துர்க்கதி நேருவதென்றால் இந்த துக்கம் ஸஹிக்கக் கூடியதன்றே. ஆகவே, தீயவர்களையும் நல்லவர்களாக்கியருள்க.

46. (ஈஷத்பக்தி:) மணவாளமாமுனிகளின் திருவடிகளில் ஸ்வல்பபக்தியிருந்தாலும், பரமார்த்தங்களை உள்ளபடி உணர்வதற்கு அவ்வளவே போதுமானது.

இங்ஙனமே மாமுனிகள் திறத்தில் சிறிது மாச்சரியமுண்டானாலும் பல கொடிய நரகங்களில் விழுந்துழல்வதற்கு அவ்வளவே போதும். அந்தோ! இவ்வுண்மையை அறிந்து வைத்தும் நசித்துப்போக நினைப்பார் பலருளரே !

47. ( நத்வா ஸ்ரீவரயோகி ) அடியேனுடைய தலை மணவாளமாமுனிகளின் திருவடிகளைத் தொழுது தன்யமாகின்றது. வாக்கு அவருடைய திருக்குணங்களைத் துதித்து க்ருதார்த்தமாகின்றது. உள்ளம் அவருடைய ஸ்ரீஸூக்திகளைச் சிந்தை செய்து பவித்திரமாகின்றது. கை அவருடைய பரந்த புகழை யெழுதி ஸத்தை பெறுகின்றது.

48. ( தத்தே ரம்யவர ) மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி உண்மையில் கடலென்னத்தகும். கடல் செய்வதெல்லாம் செய்கின்றது இதுவும். கடல் ஸ்ரீயைத் தந்தது. இந்தக்கடல் பக்தர்களுக்குச் சிறந்த செல்வத்தைத் தந்திடுகின்றது. கடல் ரத்னங்களைத் தருகின்றது; இக்கடல் ஸத்குணங்களாகிற ரத்னங்களைத் தருகின்றது. (மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைப் பயில்பவர்கட்கு நற்குணங்கள் விளையுமென்கை.) கடல் அலைகளைத்தரும். இக்கடல் மதுரோபதேச தரங்கங்களைத் தரும். கடல் சந்திரனைத் தந்தது; இக்கடல் நல்ல கீர்த்தியாகிற சந்திரனைத் தருகின்றது. (மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைப் பயில்பவர்கட்கு நல்ல புகழுண்டாமென்கை.) அக்கடல் கல்பவ்ருக்ஷத்தைப் பயந்தது. இக்கடல் ஞானமாகிற கற்பகத்தருவைத் தரும். அக்கடல் அமுதமளித்தது. இக்கடல் வேதாந்த விழுப்பொருளாகிற அமுதமளிக்கவல்லது; அக்கடல் ஹாலாஹல மென்னும் நஞ்சை நல்கிற்று; இக்கடல் ( தத்வத்ரய வ்யாக்யாநாதிகளில்) பரமத த்வம்ஸந ஸ்ரீஸூக்தியாகிற ஹாலாஹலத்தைத்தரும். ஆகவே கடலென்னப் பொருந்தும். ( பரமத த்வம்ஸந ஸ்ரீஸூக்திகளும் தொண்டர்க்கு அமுதமேயானாலும் பிறருடைய த்ருஷ்டியாலே ஹாலாஹலமென்றது. )

49. ( ரக்ஷாயாம் நிபுண: ) ரக்ஷிக்க வல்லவன் லக்ஷ்மீபதி என்றொரு ப்ரஸித்தி வீணாகவே உலகிற் பரவியது. உண்மையில் மணவாளமாமுனிகளே நம்மை ரக்ஷிப்பவராவர். இஷ்டப்ராப்தியையும் அநிஷ்ட நிவாரணத்தையும் செய்பவரே ரக்ஷகராதலால் மாமுனிகள் தாமே தமது ஸ்ரீஸூக்திகளால் அவ்விரண்டையும் செய்துகொண்டு ஸம்ஸாரிகளை நன்கு ரக்ஷித்தருளா நின்றார்.

50. (அந்தாநாம் ரவி) குருடர்களுக்கு ஸூர்ய கிரணங்களால் ஒரு பலனுமில்லையென்பதால் ஸூர்யனுக்கு ஏதேனும் குற்ற முண்டோ? அதுபோல கருவிலே திருவிலாதார் சிலர் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளால் பயன் பெற்றிலரென்றால் அதனால் என்ன சேதம்? பயன் பெற்று வாழ்கிற புனிதர்களைக் கண்டு தெளிக.

51. (பர்ஜந்யோ ஜல) மேகமானது கடல்நீரைப் பருகிப் பரமமதுரமாக வர்ஷிப்பதுபோல மணவாள மாமுனிகளும் சாஸ்த்ரக் கடலில் நின்றும் அளவற்ற விஷயங்களை முகந்துகொண்டு அதிமதுரமாக வர்ஷித்து பாக்யசாலிகள் பலரும் பருவகிக்களிக்குமாறு செய்தருளா நின்றார்.

52. (ரக்ஷாபேக்ஷண.)*"ஸர்வஜ்ஞோபி ஹி விச்வேசஸ் ஸதா காருணிகோபி ஸந் ஸம்ஸார தந்த்ர வாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே"* என்கிறபடியே ரக்ஷாபேக்ஷாமாத்திரத்தையே எம்பெருமான் எதிர் பார்க்கிறானாதலால் நாம் பரக்க வொரு

ஸாதநாநுஷ்டானம் பண்ணலாகாதென்று பிள்ளை லோகாசாரியர் அருளிச் செய்ததை நன்கு விளக்குகின்ற மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திரத்னம் எம்பெருமானுர் தரிசனத்திற்கு உயர்ந்த மணி விளக்காகவுள்ளது.

53. (அந்தர்த்வாந்தம்.) அகவிருளையகற்றுவதற்கு உலகில் ஞானவிளக்கொன்று தவிர வேறொரு கருவி கிடையாதென்பது நிர்விவாதம். அப்படிப்பட்ட அணி விளக்கை இன்னருளால் ஏற்றிவைத்தவர் மணவாள மாமுனிகள் ஒருவரேயாவர். ஆயினும் அந்தோ! அவ்விளக்கில் சலபமாகி யொழிவாரும் சிலருளரே! அன்னவர்கட்கு நேரப்போகும் துர்க்கதியை என் சொல்வோம்!

54. (வந்தே ஸுந்தர.) க்ஷுத்ர ஜனங்களுக்கு வியாமோஹத்தை விளைக்க வல்ல பலபல சுவடிகளை யெழுதி வைத்து உலகை வஞ்சிப்பார் பலருளர்; அன்னவர்களுடைய உக்திராசிகளால் அடியேனுடைய மனம் ஒருபோதும் விகாரமடையாதிருக்க வேணுமென்று மணவாளமாமுனிகளின் திருவடியிணையை இறைஞ்சுகிறேன்.

55. (அப்திர் லங்கித:) * அப்திர் லங்கித ஏவ வாநர படை: * என்று முராரிகவி பணித்தபடியே கடலைக்கடந்த வானர முதலிகளுக்குக் கடலின் ஆழம் தெரியாதாப் போலே, உலகில் பண்டிதரென்று பேர்படைத்தவர்களெல்லாரும் மேலெழுந்தவாரியாக அறிந்தவர்களே யன்றி சாஸ்த்ரார்த்த ஸாரங்களை உட்புகுந்து அறிந்தாரிலர்; மணவாள மாமுனிகளொருவரே ஆழ்ந்தஅறிஞரென்று திண்ணமாகவெண்ணுக.

56. (ணக்ஷஸ்த்ருக்ஷ) "ணக்ஷஸ்த்ருக்ஷ—கதள" "சச—ப்லுதகதௌ" என்றிப்படி தாது பாடங்களை நெட்டுருப் போட்டுக் கொண்டே வாணாளை யெல்லாம் வீணாளாகக் கழிக்கின்ற ஜடர்கள் அந்தோ! மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளை அறியப் பெற்றிலரே! நல்ல கதிக்கு வழி தேடுகின்றிலரே.

57. (அந்தஸ் ஸர்வ பதார்த்த) ஸகல பதார்த்தங்களிலும் உள்ளும் புறமுமொக்க வியாபித்திருக்கின்ற எம்பெருமானுடைய வ்யாப்தியாவது வஸ்துதோறும் பரிஸமாப்ய வர்த்தமாநத்வமன்று என்று வாதிப்பவர்களும் பகவானுடைய விசித்திர சக்தியை ஸஹியாதவர்களுமான பிறரைத் தமது ஸ்ரீஸூக்தியால் உதறித் தள்ளுகின்ற மணவாள மாமுனிகளே ஸத்துக்களில் தலைவர்.

58 (மந்யந்தே வர) மணவாள மாமுனிகள் உடையவருடைய அபராவதாரமேயாவர். பெரும்பாலும் வியாக்யான ரூபங்களான க்ரந்தங்களையே அருளிச் செய்வதும், வீண் தூஷண பரிஹாஸ வாக்குக்களைப் பொழியாமலிருப்பதுமான தன்மைகள் இவ்விரண்டு ஆசார்யர்கள் பக்கலிலுமே நன்கு பொருந்தியிருப்பதால்.

59. (வர்த்திஷ்ணூந் ப்ரதி) மேன்மேலும் ஞானவிளக்கம் பெறவேணு மென்றிருப்பார்க்கு ஒன்று சொல்லுகேன். சித்தப்ரமத்தை விளைக்கவல்ல பல்வேறு புத்தகங்களில் வீணுகப் போதைப் போக்குவது தகுதியற்றது: த்ராக்ஷாபாகத்திற்கு நிதர்சநமாக அமைந்த மணவாள மாமுனிகளின் அத்புத லலித திவ்ய ஸூக்திகளையே இடைவீடின்றி அநுபவியுங்கள்.

60 (அந்தஸ் ஸந்ததம்) என்னுள்ளத் துள்ளே மணவாள மாமுனிகளொருவர் தாமே தமது திருமேனி யொளியை விளங்கச் செய்தருளா நின்றுள்ளார்; வேறோ ராசிரியர்க்காவது எம்பெருமானுக்காவது இனி என்னெஞ்சில் இடம் கிடைப்பரிது; இல்லையெனக்கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரே.

61. (நக்ஷத்ரேச) மணவாள மாமுனிகாள்! தேவரீருடைய திங்கள்போன்ற திருமுக மண்டலத்தையும் நிலாப்போன்ற புன்முறுவலையும் செவியளவும் நீண்ட திருக்கண்களையும் திருவாய் மொழியின் மணம் கமழும் திருவதரத்தையும் திவ்யோர்த்வ புண்ட்ர ஸுபகமான திருமேனியையும் நேரில் ஸேவிக்கப் பெற்றவர்களே பாக்யசாலிகள்.

62. (தத்தே நிச்சல) மணவாள மாமுனிகள் என்னுள்ளத்துள் எப்போதுமெழுந்தருளியிருந்து தமது திருவடிகளில் ஸ்திரமான பக்தியை யளிக்கின்றார்: விரக்தியை விளைக்கின்றார்; பொருளாசையைப் போக்குகின்றார்; ஓ மனமே! குபேராதி பதவிகளைப் பெறுவதற்கும் நீ ஆசைகொள்ளாதே; விஷயாந்தரங்களில் ஓட நினைப்பதும் வேண்டா; மதயானைபோல் கண்டவிடமும் திரியாதே; மாமுனிகளிடத்தே ஊன்றியிரு.

63. (ஏரண்டோபி) *நிரஸ்தபாதபே தேசே ஏரண்டோபி த்ருமாயதே* [மரமில்லாதவூரில் ஆமணக்கஞ் செடியும் மரமாம்] என்றாப்போலே ஆங்காங்குப் பலரும் ஆசார்ய பீடத்தில் அமர்ந்து ஆசார்ய விருது வஹித்து விடலாம். உண்மையில் மணவாள மாமுனிகளொருவர் பக்கலிலேயே ஆசார்யத்வ பூர்த்தியுள்ள தென்று குடப்பாம்பில் கையிட்டுரைப்பேன்.

64. (ரக்ஷிஷ்யதி.) உலகில் பலரும் எம்பெருமானையே ரக்ஷகனாக மயங்கி அவனையே துதிக்கின்றனர். அந்த பகவான் தானும் ஆசார்ய ஸம்பந்த மில்லாதாரைக் கடாக்ஷிக்க வல்லவனல்லன்; மணவாள மாமுனிகளிடத்திலேயே ஆசார்யத்வம் புஷ்கலமாதலால் இவருடைய ஸம்பந்தத்தை நோக்கியே அவன் ரக்ஷிக்க வல்லவன்; ஆதலால் மாமுனிகளே முமுக்ஷுக்களுக்குத் தஞ்சம்.

65. (அத்வாநத்வ) நல்வழி தீ வழி தெரியாது திகைக்கின்றவர்களுக்குக் கைகொடுக்கவே பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்த ரஹஸ்யார்த்த க்ரந்தங்களை மணவாளமாமுனிகள் பரமகிருபையோடு விசதமாக வியாக்யானித்தருளா திருந்தால், அந்தோ! உலகம் முழுவதும் ஸம்ஸார ஸாகரத்தில் அழுந்தித் துவளுமே! மாமுனிகளின் பேரருள் பேச்சுக்கு நிலமோ?

66 (மக்நாநாம்) மணவாள மாமுனிகளின் திருவடிகள் பிறவிக்கடலுள் அழுந்தினார்க்கு நாவாய் போலும்; அவருடைய திருவாக்குக்கள் விஷயவிஷதரங்களாலே கடியுண்டார்க்கு கருட மந்த்ரம் போலும்; அவருடைய திருமேனிவிளக்கத்தைச் சிந்தை செய்வது பாவங்களாகிற காட்டுத் தீயில் வேகின்றவர்களுக்கு வர்ஷதாரை போலும், அன்னவர் வாழ்க.

67 (யத்நோவச்யவிதேய) 'சைதன்ய கார்யமான ஸாதநாநுஷ்டானங்களை அவசியம் பண்ணியே தீரவேண்டும்; இல்லையானால் முக்திபெற வழியில்லை' என்பாருடைய அகவிருளைப் போக்குமதாய் ப்ரபந்நர்களுக்கு அருமருந்தான ஸ்ரீஸூக்திகளைப் பணித்தருளின மணவாள மாமுனிகள் அடியேனை *ஆம்முதல்வனிவனென்று கடாக்ஷித்தருளினார்.

68 (அஹ்நாயாச்ரயத) மணவாள மாமுனிகளின் திருவடித் தாமரைகளை உகந்து விரைந்து பணிமின்: பின்னை அவருடைய திவ்ய ஸூக்திகளுள் ஆர்த்திப் பிரபந்தத்தை உரக்க அநுஸந்தித்து எல்லா ஆர்த்திகளையும் உடனே தொலையப் பெறுங்கள்; ஸகல ச்ரேயஸ்ஸுகளும் தன்னடையே வந்து சேரும்படி கண்டு மகிழுங்கள்.

69. (ஜந்மாந்யத்ர.) அடியேன் இப்போது போலவே எப்போதும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளையே சுவைத்திருப்பேனாயின் அடியேன் மீண்டு மீண்டும் இவ்வுலகிலே பிறக்கப் பெறுவேனாக; பிறவிதோறும் இப் பெரும் பாக்கியம் வாய்க்குமாகில் பரமபதத்திலும் வாஞ்சை யுடையேனல்லேன் ; மாமுனிகளே! இதுவே உண்மையுரை: பூர்ணமாகக் கடாக்ஷித்தருளவேணும்.

70. (ஆசாரந்.) மணவாள மாமுனிகள் காத்தருளின ஸதநுஷ்டானங்களில் பாக்யசாலிகள் ஊன்றிப் போருவர்கள் : அங்ஙனல்லாத மற்றையோர் தீயவழிகளில் அலமந்து துவள்க. பரமபவித்திரமான இந்த ஸத்ஸம்பிரதாயஸரணியில் பரம பாக்யவசத்தினால் பிறக்கப் பெற்றோமே யென்கிற களிப்பு அடியேனுக்கே உள்ளது.

71. (மந்த்ராஸ் ஸந்திஹி) மணவாள மாமுனிகளே! உலகில் பலபல பகவந் மந்த்ரங்கள் உள்ளன; அவற்றிற்கு என்ன பெருமை ஏற்பட்டது? அவற்றைச் சிந்திப்பாரார்? அவற்றில் யாருடைய உள்ளம் ஊன்றியிருக்கிறது? ஸ்ரீரங்கநாதனுடைய முகாரவிந்தத்தில் தோன்றின மதுவென்னலான (தேவரீர்விஷயமான) ஸ்ரீசைலேச மந்திரத்தின் பெருமையேயன்றோ உலக முழுவது மோங்கி நிற்கின்றது.

72. (ஆசார்யப்ரவரம்) மணவாள மாமுனிகளிடத்தில் எல்லாப் பெருமைகளும் விளங்க நின்றாலும் ஒரு குறை மாத்திரம் உள்ளதேயாம்: அது என்னெனில்; மிகச் சிறந்து பரமபாவனமாய் விளங்கும் ஸ்ரீசைலேச மந்திரத்தைச் சிந்தை செய்யும் பாக்கியம் அவர்க்கு இல்லையாயிற்றே.

73. (தத்வம் கிஞ்சந.) மணவாளமாமுனிகளே! ஒரு உண்மைகேளீர் ; தேவரீருடைய மஹோத்ஸவம் கச்சிநகர் முதலான பலதலங்களில் பெருக்க நடக்கிறதன்றோ. அந்த ஸமயங்களில் அடியேன் அநுபவிக்கும் ஆனந்தாதிசயத்தை தேவரீர் விபவத்தில் அநுபவிக்கப் பெற்றிலீரன்றோ. [அப்போது மணவாளமாமுனிகளுத்ஸவமென்று ஒன்று நடைபெறவும் அவ்வானந்தத்தை அநுபவிக்கவும் ப்ராப்தமாகவில்லையே.] ஆதலால் இவ்வகையால் தேவரீரைவிட அடியேனே பாக்யசாலியாவேன்.

74. (அந்யேஷாமபி) திவ்ய தேசங்களில் மற்றும் பல ஆசிரியர்களுக்கும் உத்ஸவம் நடைபெற்ருலும் மணவாள மாமுனிகளுத்ஸவத்தின் வீறு விலக்ஷண மானதே. ஐப்பசி மாதம் அவதரிக்கப் போகிறதென்னும்போதே பிடித்து எமது நெஞ்சில் நடைபெறும் உத்ஸாஹ மஹோத்ஸவத்தை என் சொல்வோம்.

75. (ரங்கரதீச்வரஃ) மணவாள மாமுனிகளே! அர்ச்சா மூர்த்திகளில் ஸ்ரீரங்க நாதனெருவனே பாக்யசாலி. அப்பெருமானேயன்ருே தேவரீருக்கு சிஷ்யனுக அமைந்த பெருமையை நாளைக்கும் காப்பாற்றி வருகிருன். ஒரு ஆசிரியர்க்கும் நடைபெருத திருவத்யயனத் திருநாளை மாசிமாஸ க்ருஷ்ணபக்ஷ த்வாதசியன்று தேவரீருக்கு அப்பெருமான் நடத்திப் போருவது சிஷ்யக்ருத்யம் அவர்ஜநீயம் என்றுகொண்டன்ருே?

76. (அத்யாஹம்வரயோகி) மணவாளமாமுனிகளே! இன்று அடியேன் தேவரீரைத் துதிக்கவிழிந்து, சிறிதும் ஆலோசனையின்றியே இங்ஙனே ச்லோகமாலிகையை விரை வாகவே விண்ணப்பம் செய்துவருகிறேன்; இந்த ஸ்தோத்திரமோ முடிவு பெற்று விடும். தேவரீருடைய பெருமைக்கடலிலோ சில திவலைகள் மாத்திரமே அநுப விக்கப்பட்டன, முழுவதும் அநுபவிக்க எங்ஙனே முடியும்?

77. (மந்தப்ரஜ்ஞ): மணவாள மாமுனிகளே! அடியேன் மந்தமதி யென்று பேர் பெற்றவனுயினும், தேவரீருடைய பெருமைகளை விளக்கும் ச்லோகங்களையே இடைவீடின்றித் தொடுத்துக் கொண்டிருக்கின்றேனுதலால் மஹாப்ராஜ்ஞு னென்று விருது பெற்றேனுனேன்; தேவரீருடைய திருவருளை என் சொல்வேன்?

78. (மந்த்ரம் த்வத்விஷயம்) மணவாளமாமுனிகளே! தேவரீருடைய தனி யனுன ஸ்ரீசைலேசத் திருமந்த்ரம் ஸகல திவ்ய தேசங்களிலும் புகழ் பெற்று வருவதைக் கண்டு பொருதார் சிலர் தாம் வேறொரு பத்யத்தை ஸ்ருஷ்டித்து அடிக்கடி பிரபலமான பரிபவத்தைப் பெற்று வருகிருர்களென்பதை நன்கு அறிந்தேயிருக்குமவர்கட்கும் அந்தோ! தேவரீருடைய பெருமை தெரியவில்லையே!

79. (உக்திஸ்ஸத்யதமா) மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திவ்யஸூக் திகளே பொய்யொன்றுமில்லாதவை என்கிற உண்மையை நன்கு அநுபவித்துத் தெரிந்துகொண்டவர்களான பூருவாசாரியர்கள் * பொய்யிலாதமணவாளமாமுனி புந்திவாழி * என்று வாழ்த்தினுர்கள், தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளை ஆராயு மளவில்அந்த வாழ்த்து ஸத்யமானதே யென்று பறைசாற்றத் தட்டில்லை.

80. (நந்தா அநந்த) * ஸித்திர் பவதி வா நேதி ஸம்சயோச்யுத ஸேவிநாம்* என்று பகவானைப் பற்றினவர்களுக்குப் பேற்றில் ஸந்தேஹமே யுள்ளதாக சாஸ்த் ரம் முறையிடுகின்றது; அங்ஙனன்றிக்கே, மணவாளமாமுனிகளின் திருவடிகளைப் பற்றினுர்க்கு ஸகலச்ரேயஸ்ஸுக்களும் மல்குமென்று ஐயமற அறுதியிடப்பட்டதாம்.

81. (இந்த்ரஸ் ஸம்யமிநாம்) பெரிய ஜீயர், மணவாளமாமுனிகள், அழகிய மண வாள மாமுனிகள், திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால் வாழ்ந்தவர், திருவனந்

தாழ்வான் திருவவதாரமானவர் என்றிங்ஙனே நாமாவளிகளை எனது நெஞ்சம் நிச்சலும் சிந்தை செய்து தூய்மை பெறுகின்றது.

82-(இந்தே ருத்ர வர) மணவாள மாமுனிகள் எங்கு எழுந்தருளியுள்ளாரென்று கேட்டால், தம்மைச் சிந்திப்பார் சிந்தையினுள்ளும், திவ்ய தேசங்களிலும், திருவாய்மொழியின் இன்னிசை மன்னுமிடங்களிலும் எழுந்தருளியிருப்பதாகப் பலரும் கூறுவர்; அடியேன் விண்ணப்பம் செய்வது அங்ஙனன்று; அவை யெல்லாவற்றோடுங் கூட என்னுள்ளத்துள்ளே யுறைகின்றாரென்பதே உண்மை.

83. (மந்த்ரோ யஸ்ய) விவேகிகளான பாக்யசாலிகளுக்கு ஸர்வஸ்வமுமான தமது தனியனால் அர்ச்சாவதாரஸ்தலங்களை யெல்லாம் புனிதமாக்கி யருளாநின்ற மணவாள மாமுனிகளின் திருக்குணங்களைப் பன்னியுரைப்பதும் ஸகல பலன்களையு மளிப்பதுமான இந்த ஸ்துதியானது வித்வான்களின் வாக்கிலே விளங்குக.

84. (மந்யந்தாமிஹ) அடியேன் மணவாள மாமுனிகளொருவரையே பெருக்கத் துதிக்கிறேனென்பது பற்றிப் பொறாமையாளர் எதுவேனும் எண்ணுக; ஸத்யமாக விஜ்ஞாபிக்கிறேன்; மாமுனிகளைச் சிந்தை செய்யப் புகுந்தபின்பு, நம்மாழ்வார் எம்பெருமானார் நம்பிள்ளை முதலானோர் திறத்திலும் அடியேன் பக்தி குறையப் பெற்றேன், ஆதலால் மாமுனிகளையே துதிப்பது எனக்கு நித்யகால க்ஷேபமாயிற்று

85. (மந்தப்ரஜ்ஞஜநா) இதன்மூலம் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களாயிருந்தாலும் அவற்றின் பொருளை ஸாதாரண வ்யுத்பந்நர்களும் எளிதாக அறிந்துகொள்ள வேணுமென்று நாரிகேளபாக மன்றிக்கே த்ராக்ஷாபாகமாக இத்தகைய ஸ்தோத்ரங்களை மணவாள மாமுனிகள் என்வாக்கில் நின்றும் அன்போடு வெளியிடுவித்தருள்கின்றார்; அப்பேராசிரியரின் பரம கிருபையை என்னென்பது!

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசார்ய ஸ்ரீ வைஷ்ணவதாஸன்
விண்ணப்பஞ் செய்த ஸ்ரீ சைலேசதயாபாத்ர ஸ்தோத்ரம் முற்றுப் பெற்றது.

ஸ்ரீமத் வரவர முநீந்த்ர ச்லோக ஷட்சதியில்

இரண்டாவதுஸ்தோத்ரம்.

# ஸ்ரீ வரவர முநிகர்ணாம்ருதம்

(அவதாரிகை) எம்பெருமான்விஷயத்தில் ஈடுபட்டவர்கள் * மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு * என்று சொல்லி மங்களாசாஸநம் செய்வது போல மணவாள மாமுனிகளிடத்தில் ஈடுபட்டவர்கள் * வரவரமுநி பத கமல! ஜய * என்று (வடமொழியில்) சொல்லி மங்களா சாஸநம் பண்ண ப்ராப்தமாகையாலே அந்த வாக்ய ஸந்நிவேசத்தை யிட்டு அதிலுள்ள அக்ஷரங்களின் அடைவே ஒரு ஸ்தோத்ரம் விஜ்ஞாபிக்கலாயிற்று. இதற்கு ஸ்ரீமத் வரவரமுநி

கர்ணாம்ருதமென்று ஒரு பெரியார் நாமமிட்டருளினர். மேலேவரும் ரஸாயந ஸ்தோத்ரமும் இதுவும் லகுவான அக்ஷரங்களே நிரம்பப் பெற்றது. .... .... .... *

86 (வரவர) மணவாள மாமுனிகளின் திருவடித் தாமரையே! நீ வாழ்க என்னும் பொருளதான * வரவரமுநிபதகமல! ஜய * என்கிற இந்த வொரு பாதத்தையே சிந்தை செய்மின்; (அதற்குமேல் சக்தியிருந்தால்) இந்த பாதத்தின் எழுத்தடைவே அமைக்கப்பட்ட இந்த கர்ணாம்ருத ஸ்துதியையும் கண்டபாடம் செய்து சொலலுவன். (வடமொழியிலுள்ளவது தேவநாகரலிபியிலுள்ளது)

87. (வரவர) மணவாள மாமுனிகளே! தேவரீருடைய திருவடிகள் அடியேனது மனத்தில் மாத்திரமே எப்போதும் ஸூர்யோதயமானுப்போலே விளங்கிக் கொண்டிருக்கின்றன என்னவே அடியேனுடைய ஜன்மம் ஸபலமாயிற்று.

88. (ரவிரிஹ) மணவாளமாமுனிகளே! ஸூர்யன் வெளியிருளை மாத்திரம் போக்கவல்லவனேயன்றி உள்ளிருளை யொழிக்க வல்லவனல்லன்; தேவரீர் அடியேனது அகவிருளையெல்லாம் அகற்றியருள்கின்றீர்.

89. (வசஸிச) மணவாளமாமுனிகளே! தேவரீருடைய பரம மதுரமான ஸ்ரீஸூக்திகளையே ஸதா அடியேனுடைய வாக்குக்கும் நெஞ்சுக்கும் விஷயமாக்கியருளிற்று; இனியெனக்கு ஸம்ஸார பயம் நடையாட விரகுண்டோ?

90. (ரகுவர) மணவாள மாமுனிகளே! இவ்வுலகில் ஸ்ரீராம க்ருஷ்ணாதி விக்ரஹங்களும் விளங்குகின்றன; தாராளமாக விளங்கட்டுமே; தேவரீருடைய திவ்ய மங்கள விக்ரஹமொன்றே அடியேனது கண்ணுக்குத் தோற்றுவதாம்

91 (முநிரிதி) முநியென்றும் குருவென்றும் யதியென்றும் இவ்வுலகில் மற்றும் பலரும் பேசப்பட்டிருந்தாலும் அந்த முநி-குரு-யதிபதங்களெல்லாம் மணவாள மாமுனிகள் திறத்திலே தான் அர்த்த புஷ்டியுடன் விளங்குவன.

92 (நிதிமிவ) மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திவ்ய ஸ்ரீ ஸூக்திகளை உள்ளத்துள் நிதிபோல வைத்துக் காக்க வல்லவர்கள் பலபிறவிகளில் செய்த பாவங்களெல்லாம் ஒருநொடிப் பொழுதில் தொலையப்பெறுமவராவர்கள்.

93 (படுமதிரிஹ) இவ்வுலகில் விவேகியான வொருவன் தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளை ஓயாமல் வாய்க்கொள்வனாகில் அவன் ஹயக்ரீவனை வென்றவனென்று புகழ் பெற்றவனேயாவன்.

94 (தமசமமுக) சமதமாதி குணக்கடலென்று பெற்ற புகழினால் உலகத்தையெல்லாம் பரிமளிக்கச் செய்தருளாநின்ற மணவாள மாமுனிகளே! தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளை என்னுடைய நெஞ்சகம்பால் எழுதியருள வேணும்.

95. (கலிபலம்) கலியின் கொடுமை நாள்தோறும் எவ்வளவு வளர்ந்து சென்றாலும் அதுபற்றி எனது நெஞ்சில் சிறிதும் அச்சமில்லை. ஏனென்றால். மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளினால் என்னுள்ளம் தெளிவுபெற்றிருப்பதனால்.

96. (மம மதிரிஹ) மணவாள மாமுனிகளே! அடியேன் எப்போதும் தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளையே நெஞ்சில் நிதியாகக் கொண்டிருக்கிறேனென்பதுபற்றி அடியேனது புத்தியைப் பலரும் கொண்டாடுகின்றனர், இஃது ஒக்கும்.

97.( லஸதிஹ .)மணவாளமாமுனிகளே! இவ்வுலகில் மற்றும் பல ஆசிரியர்களின் திருவாக்குகள் பல விளங்கினாலும் அவற்றால் பயனொன்றும் காணோம்; தேவரீருடைய ஸ்ரீஸூக்திகள் அவதரியாதிருந்தால் இருள் செறிந்தேயிருக்கும்.

98. ( ஜகதிதம் ) இவ்வுலகமானது அளவுகடந்த ஆசாரியர்களை நிரம்பக் கொண்டது; இன்னமும் லக்ஷக்கணக்கான ஆசாரியர்கள் தோன்றட்டுமே ; அதனாலென்ன ? மணவாளமாமுனிகளொருவரே ஒப்பற்ற ஆசாரியர்.

99 (யதிபதிமதம்) எம்பெருமானார் தர்சனத்தை விளங்கச் செய்வதற்கென்றே இந்நிலவுலகில் திருவவதரித்தருளின பேரருட்கடலான மணவாளமாமுனிகள் அடியேனுள்ளத்துள் மகிழ்ந்து உறைகின்றார்.

100 (வரவர) மணவாளமாமுனிகள் விஷயமான இந்த ஸ்தோத்ரமானது ஒருகுணமுமற்றதாயினும் வித்வான்களின் உள்ளத்தில் மிக்க மகிழ்ச்சியைத் தருமென்பது திண்ணம், என்று விஜ்ஞாபித்து இந்த் வடமொழி ஸ்தோத்ரம் தலைக்கட்டப்பட்டது.

ஸ்ரீ மத்வரவரமுநீந்த்ரச்லோக ஷட்சதியில்

இரண்டாவது ஸ்தோத்ரமான ஸ்ரீ வரவரமுனி கர்ணாம்ருதம் முற்றிற்று.

—: ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர ஷட்சதியில் :—

மூன்றாவது ஸ்தோத்ரமான

# ஸ்ரீ வரவரமுநி வைபவ ஸ்தோத்ரம்

(முன்னுரை) " ஸ்ரீ சைலேசதயாபாத்ரம் " என்கிற தனியனிலுள்ள முப்பத்திரண்டு அக்ஷரங்களில் ஒவ்வொரு அக்ஷரத்தையும் அடைவே ஒவ்வொரு ச்லோகத்தின் முதலெழுத்தாகக் கொண்டது இந்த ஸ்தோத்ரம்.

101 (ஸ்ரீமத்வர.) கற்பகக்கொடிபோல் விரும்பிய பொருளனைத்தையும் பதந்தோறும் அளிக்கவல்ல ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்தவரும் ஸமஸ்த திருக்கல்யாண குணங்களுக்கும் கொள்கலமுமான மணவாளமாமுனிகளை எப்போதும் வணங்குவன்

102 (சைல இவ.) மணவாளமாமுனிகளே! தேவரீர், ஸ்ரீஸூக்திகளாகிற புண்ணியநதிகளுக்கு மலைபோல் உத்பதிஸ்தானமாயும், ஸம்ஸாரதாபங்களினால் வருந்தினவர்களுக்கு நிழல் தரும் வ்ருக்ஷம்போன்றவராயும், தீபநெறியாகிற இருளைத் தொலைப்பதில் இரவிபோன்றவராயும் விளங்கினீர்.

103 (லேசோபி) தமது ஸ்ரீஸூக்திகளில் ஸ்வல்பபாகத்தைச் சிந்தனைசெய்தாலும் ஆனந்தம் பொங்கிவளரும்படியாக அவற்றைத் திருவாய்மலர்ந்தருளிய மணவாளமாமுனிகள் தமது திருவடித்தாமரைகளில் (அடியேன் போல்வார்க்கு) பக்தியை விளைத்தருளாநின்றார்.

104 (சமயதி) தீவினைகளனைத்தையும் தொலைத்து நல்லறிவை நல்குகின்ற திவ்யஸூக்திகளைத் திருவாய்மலர்ந்தருளின மணவாளமாமுனிகள் எப்போதும் எனது உள்ளத்திலே விளங்காநின்றார்.

105 (தயயா) எம்பெருமான் தனது நிர்ஹேதுக கருணையினாலே நம்மைக் காத்தருள்கிறானென்னுமிடத்தை விளங்கக்காட்டும் ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்தருளின மணவாளமாமுனிகள் என்னுள்ளத்தில் நிர்ஹேதுக கருணையோடு எழுந்தருளியுள்ளார்.

106 (யாது ஸகலோபி.) மணவாள மாமுனிகளின் வியாக்கியானங்கொண்டே ஸகலார்த்தங்களையும் அறியக் கூடியதாகவுள்ள ஸ்ரீவசநபூஷணமென்னும் திவ்ய சாஸ்த்ரத்தின் அநுபவத்திலேயே அடியேனுடைய வாழ் நாளெல்லாம் செல்ல வேணும்.

107 (பாது வாயோகி) ரஹஸ்யத்ரயார்த்த விவரணமாகப் பிள்ளையுலகாசிரியர் பணித்தருளின முமுக்ஷுப்படியை மிகவழகிய புனிதமான திவ்யஸூக்திகளினால் ஸத் ஸம்ப்ரதாயப்படியே வியாக்கியானித்தருளின மணவாளமாமுனிகள் நம்மைக் காத்தருள்க.

108 (த்ரய்யந்தார்த்தம்) பிள்ளையுலகாசிரியர் பணித்தருளிய தத்வத்ரய மென்னும் ரஹஸ்யக்ரந்தத்தை வியாக்கியானித்தருளும் முகத்தால் ஸகல வேதாந்தஸாரப் பொருள்களையும் எளிய நடையில் உபகரித்தருளின மணவாள மாமுனிகளே நமக்கு அகவிருளை அகற்றவல்ல பேராசிரியர்.

109. (தீரிஹ ஜகதி.) இவ்வுலகில் அவதரித்துள்ள பலபலவாக்குக்களை அநுபவித்து ஓய்வு அடைகின்ற எனது புத்தியானது மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளின் அநுபவத்திலிருந்து மாத்திரம் ஒருபோதும் ஓய்வடைகின்றதில்லை. "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே." என்னுமா போலே நித்யாபூர்வமானவை மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளென்க.

*110.* (பவபயபேஷஜம்.)அழகியமணவாளப்பெருமாள் நாயனாரருளிச்செய்ததும் பிறவியென்னும் நோய்க்கு மருந்துமான ஆசார்யஹ்ருதய மஹாசாஸ்த்ரத்தின் ஸகலார்த்தங்களையும் விசதமாகக் காட்டவல்ல வியாக்கியானத்தைத் திருவாய் மலர்ந்தருளிய மணவாளமாமுனிகள் வாழ்க.

*111.* (பக்த்யா) மணவாளமாமுனிகளின் முகாரவிந்தத்தின் மகரந்தம் போறதும் ஸத்துக்களின் ஹ்ருதயத்திற்கு சோபாவஹமுமான உபதேசரத்தினமாயென்னும் திவ்யப்ரபந்தத்தை அன்புடன் ஓதுமின். [இதில் (க்த்யா) இரண்டமெழுத்து.]

*112* (திசது மயி) திருவாய்மொழியின் உட்பொருள்களைத் திருவாய்மொழி நூற்றந்தாதியென்னும் திவ்யப்ரபந்த மூலமாக வெளியிட்டருளின மணவாள மாமுனிகள் அடியேனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸை அருளவேணும்.

*113* (குருபிரிஹ) இவ்வுலகில் பல பல ஆசிரியர்களால் அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீஸூக்திகள் அளவு கடந்தவை யுண்டெனினும் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகளிலுள்ள இனிமை இணையற்றதேயாம்.

*114* (குணலவ) ஒரு யோக்யதையும் சிறிதுமில்லாத அடியேனுக்கும் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளின் ஆழ்பொருள்களெல்லாம் நன்கு தெரியும்படி அந்த மாமுனிகளின் திருவருளே வாய்க்கவேணும். [இந்த ச்லோகத்தில் ணகரம் இரண்டாமெழுத்தாக அமைக்கப்பட்டது.]

*115* (அர்ணவ) "அப்ரமேயோ மஹோததி:" என்னப்பட்ட கடலின் காம்பீர்யத்தையும் அளவிடவல்லார் சிலருண்டு; மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திக்கடலின் காம்பீர்யம் மாத்திரம் ஒருவர்க்கும் நிலமன்று. [இந்த ச்லோகத்தில் (ர்ண) என்கிற எழுத்து இரண்டாமக்ஷரமாக அமைக்கப் பட்டது.]

*116* (வம்சே ஸூமஹதி) மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளில் பக்தி விசேஷம் இல்லாவிடினும் அத்வேஷமாவது இருந்திருக்குமாகில் அதன்பயனாக மாசில்குடிப்பிறப்பும் நல்லுணர்வின் மிகுதியும் சமதமாதி குணபூர்த்தியும் விளையுமென்று மஹான்கள் கூறுகின்றார்கள்.

*117* (யதிபதி) மணவாளமாமுனிகள் எம்பெருமானாருடைய அபராவதாரமேயென்று அறுதியிடுவதற்குப் பலபல சான்றுகள் உள்ளனவாதலால் அவற்றையே எப்போதும் சிந்தை செய்வோனாக.

*118.* (தீர்த்வா) பிறவிக்கடலைக்கடந்து ஒருகால் விண்ணுலகம் சென்று சேரப்பெறுவேனாயினும் அங்கும் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியமுதமே அடியேனுக்கு உணவாகவேணும்.

**119** (த்ரவதித்ருஷதபி) கேட்டவளவிலே கல்லும் உருகும்படியான நடையில் அமைந்த யதிராஜவிம்சதியை அருளிச் செய்தவரும் சமதமாதி ஸத்குண நிதியுமான மணவாளமாமுனிகள் உலகைக் காத்தருளவேணும்.

120 (ப்ரநயதி.) பகவத்கீதையின் அற்புதமான தாற்பரியத்தை விளங்கக்காட்ட வல்ல கீதாதாத்பர்ய தீபமென்னும் வியாக்கியானத்தை யருளிச்செய்த மணவாள மாமுனிகளின் சிறந்த திருநாமங்களையே என்வாய் உரைத்திடுக.

121 (வரதாதிராஜ.) பேரருளாளன் விஷயமாகப் பரமபோக்யமான மங்களா சாஸந ஸ்துதியை அருளிச்செய்த மணவாள மாமுனிகளுக்கே என் வாக்கு அநவ ரதம் பல்லாண்டு பாடக்கடவது.

122 (ப்ரவணம்) எம்பெருமானுருடைய திருக்குணங்களை அழகாகப் பேசவல்லதும் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தினால் சிறப்புற்றோங்குவதுமான இராமா னுச நூற்றந்தாதியில் நெஞ்சே! எப்போதும் ஊற்றமுற்றிருப்பாயாக. (இந்த ச்லோகத்தில் ணகாரம் மூன்றாவது அக்ஷரமாக அமைக்கப்பட்டது.)

123 (வஞ்சயிதும்) கபடபக்தியினால் உலகை வஞ்சிக்க நினைத்தாலும் அந்தக் கபட பக்தியையும் மணவாளமாமுனிகள் விஷயமாகவே கொள்வது நலம்; ஏனென் னில், மாமுனிகள் திறத்தில் பக்திபாவனை செய்யினும் ஆத்மா புனிதமாகுங்காணும் "பொய்யேகைம்மைசொல்லி" இத்யாதி காண்க.

124 (தேயாந் வரவர.) மணவாளமாமுனிகள் பெரியாழ்வார் திருமொழிக்குத் தாமருளிச்செய்த இனிய வியாக்கியானத்தில் மிகவும் ஆழ்ந்து அவகாஹிக்கவல்ல உள்ளத்தை எனக்கு அருள்புரியவேணும்.

125 (ரமயதிமம) ஆசார்ய ஸார்வபௌமரான மணவாளமாமுனிகள் அருளிச் செய்த ஸகலப்ரமாண ஸங்க்ரஹமென்னும் [பிரமாணத்திரட்டு] திவ்யக்ரந்தம் என்னுள்ளத்தை எப்போதும் உகப்பிக்கின்றது.

126 (ய இஹ வரயோகி.) இந்நிலத்தில் அடிக்கொதிப்பால் ஆர்த்திப்பிரபந்த மருளிச் செய்தருளின மணவாளமாமுனிகள் 'இன்னமொரு நூற்றாண்டிரும்' என்ற வாழ்த்துப்படியே இவ்வுலகில் எந்நாளுமெழுந்தருளியிருந்துகொண்டு நமது ஆர்த்தி களைத் தீர்த்தருளவேணும்.

127 (ஜாயாஜநநீ) தாரமென்றும் தாயென்றும் தந்தையென்றும் ஸஹோதர னென்றும் பலரிடத்துப் பாலிபாயக் கூடிய அன்பு முழுவதும் அடியேனுக்கு மண வாளமாமுனிகளின் திருவடிகளிலேயே பதியக்கடவது. ஸகலவித பந்துக்களும் மாமுனிகளேயென்கை.

128 (மாதவ முகுந்த) எனது வாய், மாதவ! முகுந்த! முராரே! மதுஸூதந! கேசவ! என்சிற திருநாமஸங்கீர்த்தனங்களை விட்டிட்டு எப்போதும் மணவாள மாமுனிகளின் திருநாமங்களையே கூறப்பெறவேணும்.

129 (தரலமபி) எனதுநெஞ்சு நின்றவாநில்லாது அலைபாய்வதேயானாலும் மணவாளமாமுனிகளின் திருவடிகளில் மாத்திரம் ஒருபடிப்பட ஆழ்ந்த அன்பை

யுடைத்தாயிருக்கின்றது. இங்ஙனே அருள்புரிந்த அந்த மாமுனிகளின் திருவருளை எங்ஙனே புகழ்வேன்.

130 (ரங்கீ ஸ்வயமிஹ.) ஸ்ரீரங்கநாதனையும் தம்பக்கலிலே சிஷ்யனாகக்கொண்ட மணவாளமாமுனிகளின் மஹிமை என்போன்ற சிறியோர்களின் இளைய புன்கவிதைகளால் வருணித்துத் தலைக்கட்டக்கூடியதோ?

131 (முஹுரா²ஹ) மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியமுதத்தைப் பருகிப் பருகிக் களித்த ஸ்ரீரங்கநாதன் சோதிவாய்திறந்து பணித்த * ஸ்ரீசைலேசத்தனியன் உலகிலுள்ள ஸகலமந்த்ரங்களையும் வென்று வீறுபெற்று விளங்குகின்றது.

132 (நிகிலமபி) ஆங்காங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களனைவரும் மணவாளமாமுனிகளையே தேவதையாகக்கொண்ட எந்த ஸ்ரீசைலமந்த்ரத்தையே நாடோறும் திருச்செவிசாத்தித் திருவுள்ளம் பூரிக்கின்றனரோ அந்த மந்த்ரத்தையே நான் எப்போதும் ஜபிக்கக்கடவேன்.

133 (மஹதாம் சுபகுல) ஸ்ரீவைஷ்ணவதாஸனனவடியேன் பெரியோர்களின் நற்குலத்திற் பிறந்ததனாலும் பேராசிரியர் திருவருளுக்கு இலக்காகப் பெற்றதனாலும் இந்த ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ் செய்யலானேன்.* .... .... *

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரஷட்சதியில்

மூன்றாவதான

ஸ்ரீவரவரமுநி வைபவ ஸ்தோத்ரம்

முற்றுப் பெற்றது.

ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரஷட்சதியில்

நான்காவதான

# ஸ்ரீமத் வரவரமுநி ஸ்தோத்ரம் ரஸாயநம்.

(முன்னுரை) ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்னும் தனியனிலுள்ள எழுத்துக்களின் அடைவே நெடிலெழுத்து இன்றியே குறிலெழுத்துக்களையே அமைத்து இந்த ஸ்தோத்ர ரஸாயநம் இயற்றப்படுகிறது. (பாதங்களின் முடிவில் மாத்திரம் நெடிலெழுத்து இருப்பது விருத்தமன்று.) இந்த ஸ்தோத்ரத்தில் தீர்க்காக்ஷரம் புகாமையினாலே ஸ்ரீசைலேசத்தனியனில் தீர்க்கமாகவுள்ள அக்ஷரங்களும் இதில் ஹ்ரஸ்வமாயிருப்பது பொருந்தும். .... .... .... *

134 (ச்ரிதஜந) அடியார்கள் செய்த பாவங்களையெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் தீயினில் தூசாக்குகின்ற மணவாளமாமுனிகள் தமது திருமேனியை எப்போதும் என்னுள்ளத்துள்ளே காட்டியருளா நின்றார்.

135 (சமதம) சமதமாதி குணக்கடலே! மிகத்தெளிவான வியாக்கியானாங்களை யருளிச் செய்யவல்லவரே! மணவாளமாமுனிகளே! அடியேன் இங்கு நாடோறும் தேவரீருடைய திருப்புகழ்களையே அநுபவியா நின்றேன்.

136 (லகுமயி) மணவாளமுனிகளே! அடியேனுக்கு நல்ல புத்தியை நல்கவற்றுன சிறந்த திருவருளை என்மீது விரைவில் செய்தருளவேணும். அந்தத் திருவருள் இல்லையேல் என் ஜன்மம் எப்படி ஸபலமாகும்.

137 (சசதர) திங்களைப்பழிக்கும் திருமுகமண்டலமுடையவரே! நற்குணங்களையெல்லாம் விளங்கக் காட்டியருளினவரே! சாந்தர்களான யதிகளுக்குள் தலைவரே அடியேனுக்கு நல்ல புத்தியுண்டாகும்படி நல்கவேணும்.

138 (தரதலத்) மணவாளமாமுனிகளே! சிறிது மலர்ந்த தாமரை போன்ற திருக்கண்ணோக்கத்தை அடியேன்மீது வீழ்த்தியருளவேணும்; இவ்வருள் வாய்க்காவிடில் என்னிற்காட்டில் வேறொரு மூடன் உலகில் தேறமாட்டான்.

139 (யதிபதி) தமது வியாக்கியான ஸ்ரீஸூக்திகளாலே ஸ்ரீராமாநுஜ தர்சந ஸாரார்த்தங்களையெல்லாம் விளக்கினவரும் சிறந்த குணக்கடலென்று புகழ்பெற்றவருமான மணவாள மாமுனிகள் வாழ்க.

140 (பவநஜ) இளையபெருமாளாகத் திருவவதரித்து, திருவடி, ஸுக்ரீவ மஹாராஜர் முதலான வானர முதலிகளோடு கூடப் பெருமாளுக்குக் கைங்கரியங்கள் செய்தருளினவரும் இந்திரஜித்தை அடர்த்தவருமான மணவாளமாமுனிகளே! அடியேன்மீது மிகவும் இரங்கியருள வேணும்.

141 (தநுரிபம்) மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருவருளால் தேவரீரது திருவடிகளில் அடியேனுக்கு இடையறாத சிந்தனை நிகழுமாயின் இப்புவியில் அடியேன் சிரஞ்ஜீவியாக வாழப்பெறுவேனாக.

142 (தியமஹம்) மணவாளமாமுனிகளே! ஒவ்வொரு நிமிஷமும் தேவரீருடைய திருக்குணங்களைத் துதிப்பதிலேயே என்னுடைய புத்தியையெல்லாம் உபயோகித்து வருகிறேன்; தேவரீருடைய சிறந்த திருவருளே இதற்குக் காரணம்.

143 (பவமய) அருள்மிகுந்த மணவாள மாமுனிகளே! பிறவிக் கடலினுள்ளே விழுந்து துவளும் பலபல ஜனங்களுக்குக் கைகொடுக்க வல்லமையினாலே அவர்களெல்லாரும் துன்பம் தீர்ந்து இன்பம் பெறுமாறு செய்தருளாநின்றீர்.

144 (யதிபதி) மணவாளமாமுனிகளே! எம்பெருமானாரும் தேவரீரும் வேற்றுருவமல்லாமையாலே தேவரீரே எம்பெருமானாராக அவதரித்து அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களையெல்லாம் என்னுள்ளத்துள் எழுதியருளவேணும்.

145 (திவிபுவி) மணவாளமாமுனிகளே! அடியேனை விண்ணுலகில் கொண்டுபோய் வைத்தாலும் இம்மண்ணுலகிலேயே வைத்தாலும் என்மனத்தால் ஒருவாசியு

மில்லை ; எப்போதும் தேவரீருடைய திருக்குணங்களையே என்னுடைய ஸ்தோத்ரங்களுக்கு விஷயமாக்கிக் கொண்டிருக்க வேணுமென்பதொன்றே கோரிக்கை.

146 (குருவர)மணவாளமாமுனிகளே! திருவாய்மொழியின் ஆழ்ந்த அழகிய கருத்தையெல்லாம் அடியேனது உள்ளத்தில் நன்கு பதிய வைத்தருளினீர்; அடியேன் பால் தேவரீருடைய திருவருள் மிகக்கனத்தது.

147 ( ப்ரணமத. ) ( மாநிலத்தீர் ! ) மணவாள மாமுனிகளின் திருவடியை வணங்குமின், ஸ்ரீஸூக்திகளைச் செப்புமின், அவர்க்கே கைங்கரியம் செய்மின் ; இங்ஙனேயாகில் *நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர். ( இந்த ச்லோகத்தில் முதலெழுத்தாக வரவேண்டிய ணகாரம் இரண்டாமெழுத்தாக அமைந்துளது. )

148 ( ரசயிதும் ) மணவாள மாமுனிகளே ! தேவரீரைத் துதிக்க வேணுமென்று அடியேன் நெஞ்சிற்கொண்டவனல்லேன்; ஆனாலும் தேவரீருடைய திருக்குணங்களெல்லாம் என்னெஞ்சில் அஹமஹமிகயா வந்து கூத்தாடுவதனால் இங்ஙனே துதிகள் அமைகின்றன. ( இந்த ச்லோகத்தில் [ ர்ண ]என்கிற எழுத்துக்கு பதிலாக ரேபம் மாத்திரமே கொள்ளப்பட்டது. )

149 ( வசஸிச. ) மணவாளமாமுனிகளே ! என் வாக்கிலும் மனத்திலும் எப்போதும் தேவரீருடைய திருக்குணங்களே விளங்குமாறு செய்தருளினீர் ; இனி வேறு எந்த ஆசாரியரும் என் மனத்தில் அடிவைக்க முடியாதபடி ஆய்விட்டது.

150 ( யசஇஹ ):மணவாளமாமுனிகளே ! தேவரீருடைய திருப்புகழ் இவ்வுலகமெங்கும்பரவி "மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று வீடுதோறும் நாடுதோறும் வாழ்த்தும்படியமைந்துளது. இப் பெருமையைச் சில குமதிகள் அபலாபம் செய்ய முயன்றதனால் என்ன சேதம் ?

151 ( திதிரிதி. ) மணவாளமாமுனிகளே ! *ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ்காலமெல்லாம்* என்கிறபடியே திதியாகவும் கிழமையாகவும் நக்ஷத்ரமாகவும் அயநமாகவும் கழிந்து செல்லுகின்ற நாட்களில் ஒருநொடிப் பொழுதும் தேவரீருடைய திவ்ய ஸூக்தியின் அநுபவமின்றிக்கே யிருக்ககில்லேன்.

152 ( த்ரவதிஹ) மணவாளமாமுனிகளே ! தேவரீருடைய திவ்யஸூக்திகளை ஓய்வின்றிச் சிந்தைசெய்கின்ற என்மனம் நீர்ப்பண்டமாயுருகுகின்றது. மஹாஜ்ஞாதாக்கள் சொல்லவேண்டிய இவ்வார்த்தையை அல்பஜ்ஞனான அடியேன் சொல்லுவதற்காக வெட்கமும் படுகின்றிலேன்.

153 (ப்ரதயதி.) மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை விளக்குவது போலவே பல குத்ருஷ்டி மதங்களையும் கண்டித் தொழிக்கின்றன; இத்தகைய ஸ்ரீஸூக்திகள் எனக்கு வாசோவிதேயமாக வேணும் .

154 (வபுஷிச.) மணவாளமாமுனிகளே ! எனது மனமொழி மெய்களில் தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹவொளியே இடையறாது புரள்கின்றது; இப்படிப்பட்ட பாக்கியம் பாவியேனுக்கு எங்ஙனே வாய்த்ததோ !

155 (நதிததிஃ) மணவாளமாமுனிகளே ! அடியேனுடைய த்ரிகரணவ்ருத்தியும் தேவரீர் திறத்திலேயே பெருகிச் செல்லுகின்றது ; தேவரீரையே தொழுவது உடலின் பணி; தேவரீரையே மனனம் செய்வது மனத்தின் பணி. இந்த ச்லோகத்தின் முதலெழுத்து ணகாரத்திற்கு பதிலாக நகாரம் கொள்ளப்பட்டது.

156. (வரகவி) இப் புவியில் தைவ கடாக்ஷத்தாலே கவியியற்றும் வல்லமை வாய்ந்த பல பண்டிதர்கள் வரகவி யென்று விருது பெறுவதுண்டு; ஆனாலும் வரமுனிகவியென்று ஒருவரும் இதுகாறும் விருது பெறவில்லை; மணவாள மாமுனிகளையே இடைவிடாது துதிப்பதனால் அடியேனே அந்த உயர்ந்த விருதைப் பெற்றேனானேன்.

157.( தச சத ) மணவாளமாமுனிகளின் திருப்புகழைப் பேசுவதென்றால் அடியேனுடைய வாக்கிலிருந்து ஆயிரமாயிரம் ஸ்துதிகளும் நாள்தோறும் அவதரித்துக் கொண்டேயிருக்கும். அவை ஸூர்ய சந்திரர்களுள்ளவளவும் விளங்கக் கூடும்.

158. (ரமயதி) மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருமேனி யழகே அடியேனது உள்ளத்தை மகிழ்விக்கிறது; என்து ஒப்பற்றவநுபவத்தை நான் எங்ஙனம் எடுத்துரைப்பேன்.

159. (யதிபதி.) மணவாளமாமுனிகளே! எம்பெருமானார் நம்மாழ்வார் உலகாசிரியர் முதலான ஆசாரியர்கள் விஷயமாகவும் கௌரவபுத்தியுடன் நான் பல ஸ்துதிகளைப் பண்டு விண்ணப்பம் செய்திருக்கிறேன்; ஆயினும், ஐயோ! அதெல்லாம் எதற்குச் செய்தோமென்கிற அநுதாபமே மிகவுமடியேனுக்குள்ளது.

160. (ஜநதிதம்) இவ்வுலகில் பலபல காலங்களில் (பலபல மதங்களில்) பல பல ஆசிரியர்கள் தோன்றியே வருகிறார்கள்: ஆயினும் மணவாள மாமுனிகளைப் போன்ற ஆசிரியர் எந்த மதத்திலும் தோன்றவேயில்லையென்று ஆணையிடுவேன்.

161. (மஹிமஸ) மணவாள மாமுனிகளே! தேவரீருடைய பெருமைக்கடலில் ஒரு சிறு திவலையளவு கூட அடியேன் அநுபவிக்கவல்லவனல்லேன்; ஆயினும் ஓயாது தேவரீர் விஷயமான ஸ்துதிகளை எழுதுவதிலே ஊன்றிக்கிடக்கிறேன்.

162. (தரலஹ்ருத்.) நான் சஞ்சலசித்தனேயானாலும் மணவாள மாமுனிகளிடத்தில் அன்பு இன்றிக்கே ஒரு நிமிஷமும் இருப்பதில்லை; தேவப் பெருமாளை ஸேவித்தாலுங் கூட மணவாளமாமுனிகளென்கிற நினைவோடு தான் ஸேவிக்கிறேன். (வரதன் என்கிற திருநாமத்தில் வரவர முனியின் திருநாமத்திலேகதேசம் கலந்திருப்பதனால். )

163. (ரசயது.) இவ்வுலகில் பல கவிகள் மிகச் சிறந்த பல பல நூல்களை இயற்றட்டும்; யார் எந்த நூல் இயற்றினாலும் மணவாள மாமுனிகளின் திவ்ய குணங்களைப் பேசப் பிறந்த எனது நூல் தான் ஓங்கிநிற்கும்.

164. (முநிவர) மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருமேனியின் சிந்தனையே என்னுள்ளத்துள் இடைவீடின்றியிருத்தலால் இவ்வுலகில் என் கைக்கு எட்டாதது ஒன்றுமில்லை; நானே அவாப்த ஸமஸ்த காமன்.

165. (நிரவதி) ஒப்பற்ற எண்ணில் பல் புகழ் வாய்ந்த மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருவருளால் நலம் மிகுந்த இத்தகைய ஸ்துதிகள் நாடோறும் நிமிஷந்தோறும் அவதரித்துக் கொண்டே யிருக்க வேணும்.

ஸ்ரீமத் வரவர முநீந்தரஷட்சதியில்
நான்காவதான ஸ்ரீவரவரமுநிஸ்தோத்ர ரஸாயனம் முற்றிற்று.

(முன்னுரை) ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியனிலுள்ள எழுத்துக்களின் அடைவே மணவாள மாமுனிகள் விஷயமான மங்களாசாஸநஸ்துதி இது.

166. (ஸ்ரீசடாரிச) ஆழ்வாரெம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளாகிற அமுதத்தையே பருகும் மணவாளமாமுனிகள் வாழ்க.

167. (சைசவாத்) இளமையே தொடங்கி பகவத்குணக் கடலில் ஆழ்ந்த மணவாளமாமுனிகள் வாழ்க.

168. (லேகநே.) மிகத் தெளிவான வியாக்கியானங்களை அருளிச்செய்ய வல்ல ஆதிசேஷாம்சமான மாமுனிகள் வாழ்க.

169. (சடாரி.) நம்மாழ்வார் கலியன் முதலான ஆழ்வார்களின் அருளிச்செயல் மணம் கமழும் திருவாக்கையுடைய மணவாள மாமுனிகள் வாழ்க.

170 (தயாபால) அருளாளப் பெருமாளெம் பெருமானாரருளிச் செய்த ஞான ஸார ப்ரமேய ஸாரங்களை வியாக்கியானித்தருளின அருட்கடலான மணவாள மாமுனிகள் வாழ்க.

171. (யாதாயாத.) ஸம்ஸாரமென்னும் பாலைநிலத்தில் நாம் திரிந்துழல்வதைத் தொலைத்தருளின மணவாளமாமுனிகள் வாழ்க.

172. (பாதாப்ஜ.) திருவடி பணிந்தார்க்கு நித்யமும் ஸ்ரீபாத தீர்த்தமளித்தருளித் தூய்மை பெறுவித்த மாமுனிகள் வாழ்க.

173. (த்ரய்யந்தார்த்தாந்.) தத்வத்ரய வியாக்கியான முகத்தால் வேதாந்தப் பொருள்களை விவரித்தருளின மாமுனிகள் வாழ்க.

174. (தீமத்பி:) கோயிலண்ணன் முதலான பெரியார்கள் அடிபணியப்பெற்ற மஹா தீரரான ணவாளமாமுனிகள் வாழ்க.

175. (பயம்பயாப்தி) பிறவிக் கடலில் மூழ்கினவர்களின் அச்சத்தை அறவே போக்கியருளின மணவாளமாமுனிகள் வாழ்க.

176. (யாதநாம்) நரகத்தில் நேரக்கூடிய வேதனை யொன்றும் நமக்கு நேராத படி யருள்செய்த மணவாளமாமுனிகள் வாழ்க.

177. (திவ்யஸூக்தி) அருளிச் செயலமுதத்தை அநவரதமும் பருகிக்களிக்கின்ற மணவாள மாமுனிகள் வாழ்க.

178 (குரூணமபி.) ஸகல ஆசார்யர்கட்கும் முன்னே எண்ணத் தகுந்தவரும் ரஹஸ்யார்த்த தத்வநிதியுமான மாமுனிகள் வாழ்க

179. (குணநாம்) அளவிறந்த திருக்குணங்கட்குக் கடல் போன்று அடியார் திறத்துப் பரிவு பூண்ட மாமுனிகள் வாழ்க.

180 (அர்ணவாய.) சிறந்த அர்த்தங்களுக்குக் கடல் போன்று அற்புதமான ஞானச் செல்வம் படைத்த மாமுனிகள் வாழ்க.

181 (வந்தே ஸ்தௌமி.) இறைஞ்சுகின்றேன் ஏத்துகின்றேன் வணங்குகின்றேன் என்பவற்றுக்கு முக்கிய இலக்கான மாமுனிகள் வாழ்க.

182. (யச்சதே.) நூற்றந்தாதியினால் திருவாய்மொழி யாயிரத்தின் பொருளை யளித்த, எம்பெருமானார் தரிசன விளக்கான மாமுனிகள் வாழ்க.

183 (.தீர்த்வா.) பிறவிக்கடலைக் கடந்து பரவாஸுதேவனை ஸேவிக்க விருப்பமுடையவர்களால் ஸேவிக்கப்பட வேண்டிய மாமுனிகள் வாழ்க.

184. (த்ரவீபவ.) தம்முடைய ஸ்ரீஸூக்திகளைச் சிந்திப்பாருடைய உள்ளத்தை யுருக்குபவரும் அருளிச் செயல்களின் பாக்கியமே வடிவெடுத்தவருமான மணவாள மாமுனிகள் வாழ்க.

185. (ப்ரலயேபி.) பிரளயத்திலும் அழியமாட்டாத தனியனால் வைபவம்பெற்ற உலகம்நிறைந்த புகழாளரான மாமுனிகள் வாழ்க.

186. (வசோபூஷண.) ஸ்ரீவசன பூஷணத்தின் உண்மைப்பொருளை உணர்த்தும் வியாக்கியானத்தை யருளிச்செய்து புகழ்மிக்கவரும் ஸர்வஜ்ஞரும் பரமோதாரரு மான மாமுனிகள் வாழ்க.

187. (ணமுதாத்வர்த்த.) ணமுதாதுவின் பொருளான வணக்கத்தில் ஊற்றமே நெஞ்சிற் குடிகொண்டிருக்கப்பெற்ற ஆசார்யசிகாமணி வாழ்க.

188. (வஸிஷ்டாதி.) வஸிஷ்டாதி மஹர்ஷிகளின் வாக்கைக் காட்டிலும் மிகச் சிறந்த ஸ்ரீஸூக்திகள் யருளிச்செய்த மாமுனிகள் வாழ்க.

189. (தேசிகாநாம்) ஸகல ஆசாரியர்களும் ஒன்று சேர்ந்து உதிக்கப்பெற்றவரிவர் என்று மஹான்கள் போற்றும் மாமுனிகள் வாழ்க.

190. (ரந்த்ராந்வேஷி) என்ன தப்பு தவறு கிடைக்குமென்று தேடிப்பார்த்து தூஷிப்பதிலேயே கண்ணுனவர்களுக்கும் நிலமல்லாத நிரவத்ய ஸ்ரீஸூக்திகளை யளித்த மாமுனிகள் வாழ்க.

191. (யதிப்ரவர) ஸ்ரீபாஷ்யார்த்தங்கள் நிரம்பிய ஸ்ரீஸூக்திகளைத் தந்தருளினவரும், வானமாமலைஜீயர் பட்டர்பிரான்ஜீயர் திருவேங்கட ராமாநுஜ ஜீயராகிய மூவரால் துதி செய்யப் பெற்றவருமான மாமுனிகள் வாழ்க.

192. (ஜாக்ரத்தசாயாம்) கனவிலன்றிக்கே நனவிலேயே அடியேனுக்கு ஸேவை ஸாதித்தருளின மணவாள மாமுனிகள் வாழ்க.

193. (மாயா துரத்யயேத்யேவம்) *மம மாயா துரத்யயா* என்று கடக்க வரி தாகக் கீதையிற்சொன்ன மாயையைத் தொலைத்தருளின மாமுனிகள் வாழ்க.

194. (தத்வார்த்தம்) ஸகல சாஸ்த்ர தத்துவப் பொருள்களையும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கண்டு நிஸ்ஸந்தேஹமாக உரைத்தருளும் மணவாள மாமுனிகள் வாழ்க.

195. (ரஞ்ஜிதாசேஷ) எல்லாருடைய நெஞ்சையும் உகப்பித்தவரும், அகவிருளை அகற்றினவரும், அழகிய திருவாக்குக்களை யளித்தவருமான மணவாள மாமுனிகள் வாழ்க.

196. (முகபங்கஜ) திருவாய் மலர்ந்தருளும் தேன்மொழிகளாலே முமுக்ஷுக் களைக் காத்தருளும் மணவாள மாமுனிகள் வாழ்க.

197. (நித்யகைங்கர்ய) *சென்றால்குடையா மித்யாதிப்படியே நித்ய கைங் கரியங்களிலே நிரதரான திருவனந்தாழ்வானே வந்து திருவவதரித்தவரான மண வாளமாமுனிகள் வாழ்க வாழ்கவே.

198. (மங்களாசாஸநம்) மணவாள மாமுனிகளின் திருக்குணங்கள் திகழ நின்ற இந்த மங்களாசாஸந ஸ்துதியைச் சிந்தை செய்வார்க்கு நித்ய ஸ்ரீர் நித்யமங்கள முண்டாம் என்று பயனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று. ... *

ஸ்ரீசைலேசதயாபாத்ரமங்களாசாஸன ஸ்தோத்திரம் முற்றிற்று.

## அவதேயம் விஜ்ஞாபனம்.

199. மணவாள மாமுனிகள் விஷயமாக அறுநூறுச்லோகங்கள் விஜ் ஞாபிக்கத் தொடங்கி இதுவரையில் நூற்றுத் தொண்ணூற்றெட்டுச்லோகங்கள் விஜ்ஞாபிக்கப்பட்டு முடிந்தன. இவையெல்லாம் ஒரு தட்டாயும் இனிமேல் விஜ்ஞாபிக்கப்படுமவை ஒரு தட்டாயுமிருக்கும். நாம் நித்யநைமித்திக கர்மா நுஷ்டானங்களில் ஸங்கல்பம் செய்து கொள்ளும் போது யுகம், வருஷம், அயனம் ருது மாதம் பக்ஷம் திதி வாரம் நக்ஷத்ரம் ஆகிய இவற்றையெல்லாம் ஸ்மரிக்கிறோம்.

பூருவர்களான கவிகள் எம்பெருமானையோ ஆசாரியனையோ துதிக்கப்புகுந்து நக்ஷத்ரமாலையொன்று மட்டுமே பணித்திருக்கக் காண்கிறோம். யுக வர்ஷ அயன ருது மாஸ பக்ஷ திதி வார நக்ஷத்ரங்களெல்லாவற்றையுமுள்ளீடாக்கி மாமுனிகள் விஷயமான துதிகளையியற்ற நியமனம் பெற்றேனாதலால் இந்த வகையில் ஒன்பது ஸ்தோத்ரங்கள் விஜ்ஞாபிக்க பாக்கியம் பெற்றேன். நான்கு யுகங்களின் பெயரையும் ஒரே சுலோகத்திலடக்கிச் செய்தது யுகசதுஷ்டயஸ்தோத்ரமென்பது. ஸம்வத்ஸரமாலை 60 சுலோகங்கள் கொண்டது. அயனமாலை 2 ச்லோ. ருது மாலை 6 ச்லோ. மாஸமாலை 12 ச்லோ. பக்ஷமாலை 2 ச்லோ. திதி மாலை 16 ச்லோ. வார மாலை 7 ச்லோ. நக்ஷத்ரமாலை 27 ச்லோ. இப்படியாக ஒரு நூற்றிருபத்தேழு சுலோகங்கள் விஜ்ஞாபிக்கப்பட்டன. அவற்றின் பொழிப்புரையை இனி அடைவே அநுபவிக்கக்கடவீர்கள். பொழிப்புரைக்கு மூலமான ஸம்ஸ்க்ருதச்லோகங்களின் வைகரிதான் விநோதம்மிக்கது. நான்குயுகங்களினுடையவும் பெயர்கள் அமையப் பெற்றுள்ள யுகசதுஷ்டய ஸ்தோத்ரமென்பது கேளீர்.

200 (ச்லோ) க்ருதம் பூய பாபம் ப்ரதி கிமிதி சிந்தா பவதி வ:?

கலத்ரே தாதே வா தநய உத பந்துஷ்வபி புந:,<br>
விரக்த்யா மத்வாக்யே ருசிரிஹ பவேத்வாபரமித:<br>
கலித்வாந்தத்வம்ஸீ வரவரமுநிர் வோ த்ருவமவேத்.

இதில் நான்கு பாதங்களிலும் க்ருத த்ரேதா த்வாபர கலியுகங்களின் பெயர் (முத்ராலங்கார ரீதியில்) அமைந்திருப்பது காண்க. (இனி கருத்துக்கேண்மின்.) ஜனங்களே! நீங்கள் செய்த அபரிமிதமான பாபத்தைப்பற்றி உங்களுக்கு ஏதுக்கு விசாரம்? மனைவி தந்தை மகன் உற்ருருறவினர் என்னுமிவர்களிடத்தில் நசையற்று என்வார்த்தையில் உங்களுக்கு ருசியுண்டாகுமா? (அப்படியானல்) இன்று தொட்டு மெழுமையும் கலிகல்மஷத்தைப் போக்கவல்லவரான மணவாளமாமுனிகள் உங்களை அபஹதபாப்மாக்களாக்கி ரக்ஷித்தே தீருவர். மூன்ரும்பாதத்தில் பவேத் வாபரமித: என்றதில் த்வாபரயுகஸ்பூர்த்திகாண்க. இத: பரம் மத்வாக்யே ருசிர் பவேத் வா? என்று அந்வயக்ரமம் காண்பது. மேல்வரும் நக்ஷத்ரமாலாபர்யந்த ஸ்தோத்ரங்களிலெல்லாம் இவ்வண்ணமாகவே முத்ராலங்கார ரீதியிலே ஸம்வத்ஸராதி நாமங்களின் விந்யாஸமுணரத்தக்கது. ... ... ...

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரச்லோக ஷட்சதியில் இரண்டாவது சதகம் முற்றுப்பெற்றது.

## — இனி மூன்ருவது நூறு —

ஸ்ரீ வரவரமுநி ஸம்வத்ஸரமாலாஸ்தோத்ரம் ஏழாவது.

ப்ரபவ ஹூ முதலான அறுபது ஸம்வத்ஸரங்களின் பெயர்களை முறையே அறுபது சுலோகங்களில் அமைத்து மாமுனிகளின் திவ்யகுணாநுபவமாகச் செய்த தோத்திரமிது. இந்தத் தோத்திரத்தில் (வடமொழியமைப்பில்) இரண்டு நிர்ப்பந்தங்கள் கொள்ளப்பட்டன; (1) ப்ரபவாதி ஸம்வத்ஸர நாமத்தை ச்லோகங்களின் தொடக்கத்திலேயே வைப்பது. (2) சுலோகந்தோறும் முதலில் வரும் எழுத்தையே மற்ற மூன்று பாதங்களிலும் முதலெழுத்தாக வைப்பது.

[ஸம்ஸ்க்ருத பண்டிதர்களே அநுபவிக்க நிலமானது இது.]

201. (ப்ரபவோ பஹவஸ் ஸந்தி.) இவ்வுலகின்கண் புகழ் பெற்ற ப்ரபுக்கள் பலருளர்; இருக்கட்டுமே. மஹாப்ராஜ்ஞரான மணவாள மாமுனிகளே விவேகி களுக்கு அத்விதீய ப்ரபுவாவர். .... ... ... (1)

202. (விபவாந் விவிதாந் ஸத்ப்ய:) மணவாள மாமுனிகளின் வைபவங்களைச் சிந்தை செய்வதில் ஊக்கமுண்டானல் அது ஸத்துக்களுக்குப் பலவகைப்பட்ட விபவங்களை விளைக்கவல்லதாகும். ... ... .... (2)

203. (சுக்லபக்ஷேந்துவந்நித்யம்.) மணவாள மாமுனிகளின் திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தூயமனத்தில் வைத்துச் சிந்தை செய்பவர்களுக்கு சுத்தஸத்வ குணமானது சுக்லபக்ஷத்துச் சந்திரன் போல் மேன்மேலும் வளர்ந்து செல்லும். (3)

204. (ப்ரமோதோதநுரஸ்மாகம்) எங்கும் புகழ்பெற்ற மணவாள மாமுனி களின் ப்ரபாவங்களைச் சிந்தை செய்வதனல் நமது உள்ளத்தினுள் பேரின்ப வெள்ளம் பெருகுகின்றது. .... ... ... .... (4)

205. ப்ரஜோத்பத்திக்ருதெள நித்யம்) பரமபுருஷன் நிச்சலும் ப்ரஜைகளைப் படைத்துக் கொண்டே போவதில் வல்லவனே யொழிய, பெற்ற ப்ரஜைகளுக்கு உணவளிக்கவல்லவனல்லன்; அவன் படைத்த ப்ரஜைகளுக்கெல்லாம் உணர் வாகிற உணவையளிக்க அவதரித்தவர் நம் மணவாள மாமுனிகள். (5)

206. (ஆங்கீரஸக்ருதாநந்தம்) மணவாள மாமுனிகள் எனக்கு ஆனந்தத்தை விளைவிக்கவல்ல தமது திவ்யமங்களவிக்ரஹ திவ்யகாந்திகளை எனது நெஞ்சினுள் அடிக்கடி விளக்கிக் கொண்டே யெழுந்தருளியிருக்கிறர். .... (6)

207. (ஸ்ரீமுகாம்போஜநிர்கச்சத்) தமது முகாரவிந்தத்தில் நின்றும் வெளி வருகின்ற ஸ்ரீஸூக்திகளாகிற அமுதவெள்ளத்தைப் பெருக்குவதனல் ஸ்ரீவைஷ் ணவ ஸம்பிரதாயத்தை வளர்த்தருளாநின்ற மணவாளமாமுனிகள் வாழ்க. (7)

208. (பவஸாகரஸந்தார:) அன்பர்களே! ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து வாழவேணுமென்று விரும்புகின்றீர்களாகில், மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளில் பக்தி செலுத்துங்கள். .... ... .... (8)

209. (யுவத்வம் ப்ராபுஷாம் மாபூத்) பாலப்பிராயத்திலும் முதுமைப்பிராயத்தி லும் பெறமுடியாத நன்மைகளை யௌவனபிராயத்தில்தான் பெறமுடியும்; அந்தப் பிராயத்தைப் பெற்றிருப்பவர்களே! அதனைப் பாழ்படுத்தாமல் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைச் சிந்தனை செய்வதே உந்தமக்குத் தக்கதாம். (9)

210. (தாதுஸாம்யே ஸதி ஸ்வைரம்) கைநாடிகளெல்லாம் விஷமநிலையிலன் றிக்கே ஸமநிலையிலிருக்கும்போதே (நல்லகாரியங்களை ஸாதிக்கவேண்டியிருக்க, அது செய்யாதே) யதேஷ்டமாகத் தீயவழிகளிற் சென்றுழல்வதனல் என்னபேறு பெற்றதாகும்? எப்போதும் கண்டபாடமாகத் தரிக்கவேண்டியதான மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைக் கண்டபாடமாக்கிக் கொள்ள முயலுங்கள். (10)

211. (ஈச்வரோ ஜகதாம் விஷ்ணு:) ஜகத்துக்களுக்கெல்லாம் போஷகன் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்கிறர்கள்; அது எனக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை; அந்த ஸர்வேச்வரனையும் போஷிப்பவர் மணவாள மாமுனிகளேயாவர். (11)

212. (பஹுதாந்யதநேச்சாபி:) தனதான்யங்களை அபரிமிதமாக ஸம்பாதிக்க வேணுமென்று எங்கும் சுழன்று திரிகின்ற ஸம்ஸாரிகளின் சிந்தையில் மணவாள மாமுனிகள் பெரும்பாலும் எழுந்தருளியிருப்பதில்லை யந்தோ! ... (12)

213. (ப்ரமா திவ்யப்ரபந்தேஷு) ஆழ்வாரருளிச் செயல்களில் யதார்த்த ஜ்ஞானம் பெறவேணுமென்று விருப்பங்கொண்ட ப்ராஜ்ஞர்கள் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளை விசேஷித்துச் சிந்தைசெய்யக்கடவர்கள். .... (13)

(ப்ரமாதி வருஷத்திற்கு மற்றொருபடியான சுலோகமுங்கேண்மின்.)

(ப்ரமாதி சஞ்சலஞ்சேதி.) கீதையில் *சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண! ப்ரமாதி பலவத் த்ருடம், தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்* என்று (அர்ஜுனனால்) அடக்கவரிதாகச் சொல்லப்பட்ட மனத்தை அடக்கியாண்டவர் புகழ்பெற்ற மணவாள மாமுனிகளே யாவர். ... ... (13)

214. (விக்ரமம் வாசி பிப்ராணா:) நாவீறு படைத்த நாவலர்களும் அஸூயை குடிகொண்டநெஞ்சினராய் மணவாள மாமுனிகளின் பெருமைகளை மறைப்பதிலேயே குதூஹலங் கொண்டிராநின்றார்களந்தோ! .... ... (14)

215. (வ்ருஷபம் முனிவர்யாணாம்.) (விக்ரமவருஷத்திற்கு அடுத்தவருஷத்தை வ்ருஷவர்ஷமென்று சிலரும் விஷுவருஷமென்று சிலரும் சொல்லுவர்கள். இரண்டுபடிக்குஞ்சேர இரண்டு சுலோகங்கள் விஜ்ஞாபிப்போம். (வ்ருஷ) என்கிற பக்ஷத்திற்கு இந்த சுலோகம்.) முனிவர்களேறு என்றும் ஞானவ்ருத்தரென்றும் புகழப்பெற்ற மணவாள மாமுனிகளை என்னுடைய ஸகலபாபங்களும் தீயினில்தூசாவதற்காகத் தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(விஷு என்பது வர்ஷநாம மென்னும்பக்ஷத்தில்)

(விஷ்வக்வ்யாபியச :காய) எங்கும் பரந்த புகழ்த்திருமேனியினால் விளங்காநின்ற நிரவத்யரான மணவாள மாமுனிகள் நூறாண்டு வாழ வேணும்.

216. (சித்ரபாநுலஸத்பூஷ:) எம்பெருமான் விசித்திரமான ஒளிகள் திகழும் திருவாபரணங்களை யணிந்து என்முன்னே நின்றாலும் அவனை விட்டு, என் சிந்தனைக்கினிய மணவாள மாமுனிகளை மட்டுமே யான் சித்தை செய்வேன். (16)

217. (ஸ்வபாநுபிஸ் தமோ பாஹ்யம்) கதிரவன் தனது கிரணங்களினால் வெளியிருளை மட்டும் போக்குகின்றான். பரமமதுர திவ்யஸூக்திகளையளித்த மணவாள மாமுனிகள் தமது திருவாக்குக்களினால் அகவிருளை அகற்றுகின்றார். (17)

218. (தாரணோ பவவாராசே:) பிறவிக்கடலைக் கடக்கச் செய்பவரும், திங்கள் போன்ற திருமுகத்தையுடையவரும், தாபத்ரயத்தையும் தணிக்கவல்லவருமான மணவாள மாமுனிகள் என்னுடைய இருள்மலிந்த மதியை மாற்றியருளவேணும். தெருள் கொள்ளச் செய்யவேணும். .... ... (18)

219. (பார்த்திவாந் தநதர்ப்பாடயாந்) செல்வச் செருக்குற்ற பாமரப்ரபுக்களை நோக்கிச் செல்கின்றவர்கள் மணவாள மாமுகளின் பரமபவித்திரமான திருவடித் தாமரையை நோக்கிச் செல்லக்கடவர்கள். .... ... (19)

220. (வ்யயம் வாசாம் விதந்வந்தி) அறிஞர்களுங்கூட தங்களுடைய வாக்கை வீணாகவே அஸ்தானத்தில் விநியோகிக்கின்றார்கள்; அன்னவர்கள் தங்களது விவேக சக்தியைச் செலுத்தி, தாங்கள் படைத்த நாவீறுகொண்டு மணவாளமாமுனிகளைத் துதித்துத் துயர் தீர்வது நலம். ... ... (20)

221. (ஸர்வஜித் பகவாந் விஷ்ணு:) தனது மேன்மையினால் எங்கும் வெற்றி பெற்றவனான எம்பெருமான் ஸ்ரீரங்கநாதனாய் மணவாளமாமுனிகளுக்கு ஸச்சிஷ்யனாகி க்ருதார்த்தனாயினன். ... ... ... ... (21)

222. (ஸர்வதாரீ ஹரிஸ் ஸாக்ஷாத்) எல்லார்க்கும் ஆதாரபூதன் ஸாக்ஷாத் ஸர்வேச்வரனேயென்பதை நாம் மதிப்பதில்லை; ஸர்வஜ்ஞரான மணவாளமாமுனிகளே தமது திவ்யஸூக்திகளால் அனைவர்க்கும் ஆதாரபூதராகிறார். ... (22)

223. (விரோதீதி கமப்யஸ்யாம்) இந்த நிலவுலகத்தில் ஒருவரையும் விரோதியென்று கொள்ளாதவராக ப்ரஸித்தரான மணவாளமாமுனிகள் விலக்ஷணரான ஆசாரியராவர். (இந்த சுலோகத்தில் விபுலாயாம்) என்றது நிலவுலகத்திலென்றபடி விபுலாஎன்று பூமிக்குப்பெயர்; அமரகோசங் காண்க.)... ... (23)

224. (விக்ருதிம் யாந்தி பூயாம்ஸ:) *பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ* என்று ஆழ்வார் வெருவியருளிச்செய்த விஷயக்ராமங்களைக்கண்டு பலர் விகாரமடைகின்றார்கள்; நாம் விகாரமடைவது அவற்றாலல்ல; மணவாளமாமுனிகளின் விசதவாக் விசேஷங்களாலேயாம். விகாரமடைவதாவது *கண்டேந ஸ்வரகத்கதேந நயநேநோத்கீர்ணபாஷ்பாம்புநா* *காலாழும் நெஞ்சழியுங் கண் சுழலும்* என்னும்படியான நிலைமைபெறுதல்.) ... ... (24)

225 (வரா இவ விவேகாந்தா:) கழுதைகள்போல் விவேக சூந்யர்களான சில தூர்த்தர்கள் மிகவும் மத்தர்களாய்க் கொண்டு மணவாளமாமுனிகளை தூஷிப்பது பொறுமையினாலன்றோ. அதனாலென்ன ? ... .. (25)

226. (நந்தநந்தந க்ருஷ்ணேதி.) நந்தன்மைந்தனே! கண்ணனே! என்று பகவந்நாமங்கள் சொல்லுவதை யான் விட்டிட்டு மணவாள மாமுனிகளின் திருநாமங்களைச் சிந்தை செய்வதிலேயே ஊன்றியிருந்து மகிழக்கடவேன். (26)

227. (விஜயோ விபுலஸ் தேஷாம்) மணவாளமாமுனிகளின் உலகமறிந்த பெருமைகளை யாவர் உபந்யஸிக்கின்றார்களோ, அவர்களுக்கு எங்கும் வெற்றியே விளையும்; உலகம்பரந்த புகழுமுண்டாகும். .... ... ... (27)

228. (ஜய ஏவ பவேந்நித்யம்) 'மணவாளமாமுனியே! வாழி வாழி' என்று உரக்க அநுஸந்திக்குமவர்களுக்கு இந்நிலவுலகில் எங்கும் ஜயமேயொழிய பராஜய ப்ரஸக்தியேயிராது. ... ... ... ... (28)

229. (மந்மதாஜ்ஞாபடா: ப்ராய:) மனிசர்கள் பெரும்பாலும் மதனனது செங்கோலுக்கு ஆட்பட்டவர்களாய் ஸம்ஸாரமண்டலத்தில் மதங்கொண்டு திரிகிறார்கள். அடியேனோவென்னில், மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்திகளாகிற மதுவைப் பருகுவதனாலுண்டாகிற மதமுள்ளவன். ... ... (29)

230. (துர்முகீதி ப்ரஸித்தாநாம்) சுடுமூஞ்சிகளென்று யாவராலும் பழிக்கப் பெற்ற துஷ்டர்களைச் சென்று துக்க நிவ்ருத்திக்காகப் பணியவேண்டா; மணவாள

மாமுனிகளின் பாலன்னமென்மொழிகளைக்கொள்ளுமளவில் ஸகலதுக்கங்களும் தொலையும். ... .... ... ... (30)

231. (ஹே விலம்பிதுமர்ஹம் ந) த்யாஜ்யோபாதேயங்களைப் பகுத்தறிய வல்ல விவேகிகளே! (நான் சொல்லுவதை நிறைவேற்றுதலில்) சிறிதும் தாமதிக்கத்தகாது. மணவாள மாமுனிகளின் பொற்றாமரையடிகளை அநாயாஸமாகத் துதிக்கக்கடவீர்கள். ... .... ... (31)

232. (விலம்பிகுண்டலோல்லாஸி) *மகரஞ்சேர் குழையிருபாடிலங்கியாடப் பெற்ற திருமுகமண்டலத்தையுடைய எம்பெருமான் என் முன்னே நிற்க வேண்டா, நின்றாலும், எங்கும் மணவாள மாமுனிகளையே காணப்பெற்ற வடியேன் அவனைக் காணகில்லேன். ... .... .... ... (32)

233. (விகாரிதா து ஹேயேதி) விகாரமடைவது ஹேயமென்று அறிஞர்களுமறிகின்றார்கள், மணவாள மாமுனிகளின் வைபவங்களைச் சிந்திப்பதனாலுண்டாகும் விக்ருதி ஹேயமன்று; விரும்பத்தக்கதேயாகும். ... (33)

234 (சார்வரீசப்ரபாஜிஷ்ணு) திங்களொளியை வென்று விளங்கும் திருமேனியையுடையவரும் க்ஷமாநிதியுமான மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளை ஸேவிப்பதனால் ஸகல பாபங்களும் தொலையும். ... ... (34)

235. (ப்லவாலாபாத் ஸதா ச) ஸம்ஸார ஸாகரத்திலழுந்தி, கரை சேர்வதற்குத் தோணி கிடைக்காமையினால் துன்புற்று வருந்திக்கிடப்பவர்கள் மணவாள மாமுனிகளின் தளிர்போன்றதிருவடிகளைத் திடமான தோணியாகப்பற்றுக. (35)

236. (சுபக்ருத் ப்ரதிதோ விஷ்ணு:) நமக்கு நன்மைகள் செய்பவனென்று ப்ரஸித்திபெற்றவனான எம்பெருமான் நமக்கு ஒரு நன்மையும் செய்தருளவில்லை; மணவாள மாமுனிகளே தமது திவ்யஸூக்திகளினால் உலகுக்கெல்லாம் நன்மை செய்து விளங்கினார். ... ... ... ... (36)

237. (சோபக்ருத்தாமஸாஹாரை:) தாமஸாஹாரங்களென்று கழிக்கப்பட்ட உணவுகளையுண்டு ஊன்மல்கி மோடுபருத்தவர்களாகி வருந்தத்தக்க நிலைமையில் நிற்குமவர்கள் மணவாள மாமுனிகளின் திருமேனியழகைச் சிந்திப்பதனால் தங்கள் உடலைப் பரிசுத்தமாக்கிக் கொள்ளுக. (ச்லோகத்தில் (சோபக்ருத்) என்றவிடத்தில் இரண்டாமெழுத்து பவர்க்கத்விதீயம். சோபமாவது தடிப்பு; அதையுண்டுபண்ணவல்ல உணவுகள் தாமஸாஹாரங்கள்.) ... ... (37)

238. (க்ரோதீ ஜநோ வ்ருதைவாத்ர) காமம் க்ரோதம் முதலிய துர்க்குணங்களைத் தொலைக்கவல்லவரான மணவாள மாமுனிகளிடத்தில் க்ரோத பரவசர்களானார் அஸூயைக்குவசப்பட்டு வீணாக எதையோ பிதற்றுகின்றனர். ... (38)

239. (விச்வா வஸுமதீ தேஷாம்) மணவாளமாமுனிகளின் ஸகலவைபவங்களையும் நன்குணர்வார்க்கு பூமண்டலம் முழுதும் வசப்பட்டதாகும். ... (39)

240. (பராபவ: கதாப்யஸ்மாந்) பரமபாவனமான மணவாளமாமுனிகளின் பொன்னடியாஞ் செங்கமலப்போதுகளைப் பணிகின்ற நம்மை அங்குமிங்குமெங்கும் எவ்விதமான பரிபவமும் அணுகாது. ... ... ... .... (40)

241. (ப்லவம்கவேஷமாணு யே.) பிறவியென்னுங்கடலில் தோணிபெரு துழல்கின்றவர்கள் மணவாளமாமுனிகளைத் தோணியாகப் பற்றினால் வானரமுதலி கள் கடலைக்கடந்ததுபோல் பிறவிக்கடலை அநாயாஸமாகக் கடக்கவல்லராவர். (41)

242. (கீலகோத்பாடநோத்யுக்த.) *கீலோத்பாடீவ வாநர:* என்னும் நியா யத்தின்படி (அதாவது, வெறுமனேயிருக்கமாட்டாமல் தன்னுடைய அனர்த் தத்தைத் தானே விளைவித்துக்கொண்டதொரு குரங்கின் கதையின்படி) சிலபாமரர் கள் தங்கள்விபத்தைத் தாமே தேடுகிறவர்களாய் மணவாளமாமுனிகளைப் பழிக்கப் புகுகிறார்கள் அந்தோ! ... .... ... ... (41)

243. (ஸௌம்யஜாமாத்ருபகவாந்) 'ஸௌம்ய ஜாமாதா' என்று திருநாமம் பெற்ற அழகிய மணவாளன் மணவாளமாமுனிகள் பக்கல் மிகவழகிய ஸ்ரீஸூக்தி களைக் கேட்டு திவ்யமான தனியனை வெளியிட்டருளினான். .... (43)

244. (ஸாதாரணாஹ்வயே வர்ஷே) பகவத் ராமாநுஜரான எம்பெருமானார் ஸாத்விகர்களை நன்கு காத்தருளவேண்டி ஸாதாரண ஸம்வத்ஸரத்தில் மணவாள மாமுனிகளாக மீண்டும் அவதரித்தனர். ... ... (44)

245. (விரோதிக்ருத்ஸ்நம் துர்த்வாந்தம்) விசத வாக்சிகாமணிகளான மணவாள மாமுனிகள் உண்மையுணர்ச்சிக்கு இடையூறான அகவிருளை யெல்லாம் நிரஸிக்க வேண்டி விலக்ஷணனான ஸூர்யனென்னும்படி தோன்றியருளினார். (45)

246. (பரிதாவீமுஹுர்ஜந்ம.) ஜன்மபரம்பரைகளிலேயே தோள்மாறித் திரி கின்ற பாமரஜனம் மணவாளமாமுனிகளின் செய்யதாமரைத் தாளிணையை ஸேவித்து இடர்நீங்கி மகிழ்கின்றது. ... .... ... (46)

247. (ப்ரமாதீ சரதாஜ்ஜந்து:) சிலர் மஹாப்ரளயமாகும்வரையில் அவதான மற்று ஸம்ஸாரஸாகரத்தில் சுழலட்டும்; என்றேனுமொருநாள் மணவாளமாமுனி களிடத்தில் ப்ராவண்யங்கொள்ள நேர்ந்தால் அன்றோடு துயர்தீர்ந்ததாம். (47)

248. (ஆநந்தமமிதம் திவ்யம்) அளவுகடந்த ப்ரஹ்மானந்தத்தைஅடைய விரும்புமவர்கள் மணவாளமாமுனிகளின் திருவடித்தாமரைகளை அன்போடு ஆராதிக்கக் கடவர்கள். .... .... ... ... (48)

249. (ராக்ஷஸாநாம் வதாயைவ) சக்ரவர்த்தி திருமகனார் அரக்கர்களை யழிக் கும் பொருட்டே அவதரித்தனர்; இளையபெருமாள் பாபிகளையும் காத்தருள்வதற் காக மணவாளமாமுனிகளாக வடிவெடுத்தார். ... ... (49)

250 (நலக்ஷ்யம் யமதூதாநாம்) மணவாளமாமுனிகளைத் தொழுமவர்கள், நரகங்களில்-நகங்கள் ஆயுதங்கள் முதலானவற்றால் நலியுமவர்களான யமதூதர் களுக்கு இலக்காகமாட்டார்கள். .... ... .... (50)

251, (பிங்கலாக்ரீதஸோமோத்தம்) சுவர்க்கம் புகவேண்டி யாகஞ்செய்பவர் கள் ஸோமபானம் செய்வர்கள்; அதற்காக ஸோமலதை ஸம்பாதிக்க வேண்டும்; ஸோமலதையைக் காட்டிலிருந்து தாமாகக் கொண்டுவரக் கூடாது; * பிங்கலயைக ஹாயந்யா ஸோமம் க்ரீணாதி* என்று வேதத்தில் ஓதியிருக்கிறபடி பிங்கலவர்ண மான பசுவை விலையாகக்கொடுத்து ஸோமலதையை வாங்கவேணும். இத்தகைய பரிச்ரமங்களைப் நிறர்வஹித்து ஸோமபானம் செய்யட்டும்; நாம் மணவாளமாமுனி களின் ஸ்ரீ ஸூக்தியமுதத்தைப் பருகிப் பூரித்திருக்கிறோம். ... (54)

252. (காலயுக்திரஸேஷாணும்) மனிதர்காள்! அனைவர்க்கும் என்றேனு மொரு நாள் காலனோடு கூடவே நேரும்; வாழ்நாளில், என்றேனு மொருநாள் மணவாள மாமுனிகளின் கருணைக்கு இலக்காகிக் களித்திருங்கள். ... (52)

253. (ஸித்தார்த்தித்வம் து நைவாத்ர) உலகில் யாவர்க்கும் ஸாத்யவஸ்துக் களில் அபேக்ஷையுண்டாகுமேயொழிய ஸித்தவஸ்துக்களில் அபேக்ஷையுண்டாகா தென்று கொண்டு பிறர் ஸித்தோபாய பூதனான எம்பெருமானிடத்தில் அவிஸ்ரம்ப த்தாலே ஸாத்யோபாய விச்வாஸிகளாகித் தடுமாறுகின்றனர். நாம் அப்படி யன்றிக்கே மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியடியாக ஸித்தோபாயத்தின் கையையே பார்த்திருக்கின்றோம். ... ... ... (53)

[ஸித்தார்த்திவருஷத்திற்கு வேறொருவகையான சுலோகமுங் கேண்மின்.]

(ஸித்தார்த்திதா யதி ஸ்ரீமத்) மணவாள மாமுனிகள் பக்கலிலே [அர்த்திதா ஸித்தா யதி] அர்த்தித்வம் ஸித்திக்குமாகில்—யாசிப்போமாகில்; ஸகலமான புருஷார்த்தங்களும் ஸித்தித்தே தீரும்; இது தடையற்ற ஸித்தாந்தம். *

254. (ரௌத்ரீம் தநுர்லதாமல்பாம்) இராமபிரான் அற்பமானதொரு சிவத நுஸ்ஸையிறுத்தானென்பது பெரிதோ? மணவாள மாமுனிகள் மிகக்கொடிய நமது ஸம்ஸாரப் புதர்களையெல்லாமன்றோ அரிந்து பொகடுகிறார். ... (54)

255. (துர்மதித்வம்ஸநீஸ் ஸூக்தீ:) மணவாள மாமுனிகள் தீயபுந்தியைத் தொலைக்கவல்ல திவ்யஸூக்திகளை யளித்தருளினார். பிறர் அவற்றில் குறை கூறிப் பாவங்களைக் கூடுபூரித்துக் கொள்கின்றனர். .... ... (55)

256. (துந்துபித்வாநதத்துல்யை:) தோஷலவலேசமுமற்றுக் குணக்கடலாக விளங்குகின்ற மணவாள மாமுனிகளின் மீது தூஷணோக்திகளைப் பறையடிக் கின்ற பாவிகளை வையஞ்சுமப்பதும் வம்பு. .... ... .... (56)

257. (ருதிரோத்காரி பாணௌகாந்) எம்பெருமான் (அவதாரங்களில் உதிர மொழுக நின்ற கொடியசரங்களைத்தான் வீசியெறியவல்லவன்; மணவாள மாமுனி கள் மதுரமான திவ்யஸூக்திகளாலே அநுகூலரோடு ப்ரதிகூலரோடு வாசியற எல்லாரையும் வசப்படுத்தியருள்கின்றார். .... ... .... (57)

258. (ரக்தா க்ஷிப்ரம் ரஸஜ்ஞா மே) என்னுடைய நாவானது எம்பெரு மானைத் துதிப்பதை விட்டிட்டு அல்லும்பகலும் மணவாள மாமுனிகளைத் துதிப்பதி லேயே விரைந்து ஆசைகொண்டு கிளர்கின்றது. ... ... (58)

259. (க்ரோதநோ தாருணோ மூர்க்க:) மணவாள மாமுனிகளைத் தொழுமவர் களின் வம்சத்தில் தோன்றுமவர்களெல்லாரும் ஸௌம்யமுகர்களாயும் நன்மை செய்பவர்களாயும் சதுரர்களாயும் ஜனிப்பர்களேயொழிய ஒருவரும் மாறாகத் தோன்றார். ... ... ... ... (59)

260. (அக்ஷயாஸ் ஸம்பதஸ் ஸர்வா:) இங்குமங்கும் நீங்காத செல்வங்களை யெல்லாம் நிறையப் பெறவிரும்புமவர்கள் மணவாளமாமுனிகள் விஷயமான இந்த ஸம்வத்ஸரமாலாஸ்தோத்ரத்தை அநுஸந்திக்கக் கடவர்கள். .... (60)

ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரஷ்ட்சதியில் ஸம்வத்ஸரமாலாஸ்தோத்ரம் முற்றுப்பெற்றது.

# ஸ்ரீ வரவரமுநி அயநமாலா ஸ்தோத்ரம்—எட்டாவது.

261. (பவாப்திஸந்தாரணதக்ஷிணேநி.) பிறவிக் கடலைக் கடத்த வல்லவைகளும் அமுதம் போன்றவைகளுமான சிறந்த திவ்ய ஸூக்திகளை யருளிச் செய்தவரான மணவாளமாமுனிகள் என்னுள்ளத்தைவிட்டு அகலகில்லே னென்றிருக்கிறார். (இது தக்ஷிணாயன ச்லோகம்.) (1)

262. (ஸர்வோத்தர ஸ்ரீ சடவைரிவாசாம்) லோகோத்தரமான நம்மாழ்வாரருளிச் செயலின் பரமபோக்யமான பொருளை ஸமய விசேஷத்தில் திருவாய் மலர்ந்தருளி ஸ்ரீரங்கநாதனிடமிருந்து ஸ்ரீ சைலேசத்தனியனைப் பெற்றவரான மணவாளமாமுனிகளே பரதைவம். (இது உத்தராயண ச்லோகம்.) ... (2)

263. (அயநநாம நிவேச்ய.) தக்ஷிணாயனோத்தராயண நாமங்களை யிட்டு மணவாளமாமுனிகளின் துதியராக இயற்றப்பட்ட அயநமாலாஸ்துதியை உள்ளத்துக் கொள்ளுமவர்களுக்கு எம்பெருமான் இங்குமங்கும் அன்போடு நல்வழி நல்குவன் காண்மின்—என்று பயனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று. ... (*)

264. இங்ஙனே அபூர்வமாயும் விலக்ஷணமாயுமுள்ள துதிகளை மணவாள மாமுனிகள் விஷயமாக விஜ்ஞாபனம் செய்துபோருமடியேனே க்ருதார்த்த ஜன்மா.

ஸ்ரீ வரவரமுந்யயநமாலா ஸ்தோத்ரம் முற்றிற்று.

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர ச்லோகஷட்சதியில்

## ருதுமாலா ஸ்தோத்ரம் ஒன்பதாவது

(வஸந்தருது முதல் சிசிரருதுவீறாக ஆறுருதுக்களின் பெயரையும் உள்ளீடாகக் கொண்ட மாமுனிகளின் துதி.)

265. (ஸதைவஸந்த:) மணவாளமாமுனிகளின் திருவடியிணைகளையே எஞ்ஞான்றும் சிந்தை செய்பவர்களான ஸத்துக்கள் என்னுள்ளத்துள்ளே உறைபவர்களாகி எனக்குச் சிறந்த மகிழ்ச்சியை விளைத்து அருள்புரியக் கடவர்கள். (1)

266. (ஹாஹா! பவக்ரீஷ்மவிசேஷதப்தா:) ஸம்ஸாரமாகிற கொடியவேனிலில் தாபமுற்றவர்கள் விரைவில் ஸகல தாபங்களினின்றும் விடுபடுவதற்காக மணவாளமாமுனிகளின் திருவடித்தாமரை நிழலிலொதுங்கிக் களிப்பார்களாக. (2)

267. (ஸ்ரீமச்சடாராதி.) ஆழ்வாரெம்பெருமானார் முதலான பூர்வாசார்யர்களனைவரும் திரண்ட திருவவதாரமான மணவாளமாமுனிகள் அன்பர்களுக்கு இனியராய்க் கொண்டு பல்லாயிரமாண்டு வாழ்க. .... ... ... (3)

268. (ஸ்ரீமத்வசோபூஷண.) ஸ்ரீவசனபூஷண திவ்ய சாஸ்த்ரத்திற்கு வியாக்கியான மருளிச் செய்தது முதலானவற்றாலே பரந்த புகழ்பெற்றவரும் யதீந்த்ரப்ரவணருமான மாமுனிகள் இவ்வுலகில் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க. ... ... ... ... (4)

269. (யோகீந்த்ர! ஹேமந்தரி.) மணவாள மாமுனிகளே! மிகச் சிறந்த மந்த்ரமான தேவரீருடைய தனியனை ஸதா அநுஸந்தித்து வருகின்ற அடியேன்

பால் காருண்யமாருதாநீத கடாக்ஷ தாரைகளைப் பெருக்கிப் பல பல நன்மைகளை மேன்மேலும் வளரச் செய்தருளவேணும். ... .... (5)

270. காருண்யபூரைச் சிசிராந்தரங்க:) திருவருள் வெள்ளங்களினால் குளிர்ந்த திருவுள்ளமுடையவரான மணவாளமாமுனிகள் இப்போது போலவே எப்போதும் தமது திருக்கல்யாண குணங்களை யநுஸந்திப்பதிலேயே அடியேனைக் குதூஹலமுடையேனாகச் செய்தருளவேணும். .... .... (6)

ஸ்ரீமத் வரவரமுநிருதுமாலா ஸ்தோத்ரம் முற்றிற்று.

---

(ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர ச்லோகஷட்சதியில் பத்தாவதான.)

## மாஸமாலா ஸ்தோத்ரம்

(மேஷ மாஸம் முதல் மீன மாஸமளவும் பன்னிரண்டு மாதங்களின் நாமங்களை உள்ளீடாக்கி மணவாளமாமுனிகளைத் துதிப்பது.)

271. (கலாநா மேஷ ஸர்வாஸாம்) ஸகல கலைகளுக்கும் நிதி போன்றவரான நம் மணவாளமாமுனிகள் அருள் கூர்ந்து எஞ்ஞான்றும் என்னுள்ளத்துள்ளே உறைவாராக. .... ... .... (1)

272. (வலாநாம் ஈமநாயைவ) புருஷர்ஷபரென்று கொண்டாடத்தக்கவரும் தீயவர்களைத் தணிப்பதற்காகவே இந்நிலவுலகில் அவதரித்தவருமான மணவாளமாமுனிகள் மேன்மேலு மோங்குக. ... .... (2)

273. (கதிரேஷ பணீந்த்ரோ ந:) திவ்ய தம்பதிகளின் திவ்யாஜ்ஞையினாலே மணவாளமாமுனிகளாகத் திருவவதரித்து நம்மை வாழ்வித்தருளின திருவனந்தாழ்வான்தான் நமக்குப் புகல். ... ... (3)

274. (சரந்து வக்ரகதய:) *கர்க்கடே குடிலா கதி:* என்கிறபடியே நண்டுகள் போலே குடிலகதியையுடையரான சிலர் அப்படியே திரிந்துழலட்டும்; மணவாளமாமுனிகளின்பக்தர்களிடத்திலே ருஜுகதியுள்ளதென்பதுஉலகறிந்தது. (4)

275. (ஜந்மம்ருத்யுஜராவ்யாதி.) பிறப்பிறப்பு மூப்புப் பிணிகளுக்கு அஞ்சியிருப்பவர்கள் ஸ்ரீமத் வரவரமுநிஸிம்ஹத்தினுடைய திருவருளையே தஞ்சமாகக் கொள்ளக்கடவர்கள். .... .... ... (5)

276. (ஜரீம் கவேரகந்யாயா:) காவிரியின் பெருக்கையும் மந்தமாக்கவல்ல தம்முடைய ஸ்ரீ ஸூக்தி ராசிகளினால் இந்நிலம் முழுவதையும் புனிதமாக்க வல்ல மணவாளமாமுனிகள் வாழ்க. ... ... .... (6)

277. (தநோது வரயோகீந்த்ர:.) ஆசார்ய ஹ்ருதயத்தின் சீரிய பொருள்களெல்லாம் அடியேனுள்ளத்தில் தங்குமாறு மணவாளமாமுனிகள் எனக்கு ஒப்பற்ற அருளைச் செய்தருள்க. .... .... .... (7)

278. (தாருண வ்ருச்சிக ப்ராயா:) தேள்களைப் போன்று விஷத்தைக் கக்குமவர்களான சில கொடியவர்கள் இந்நிலத்தைக் கெடுப்பவர்களுளர்; அன்னவர்கள் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளினால் திருத்தம் பெறுக. .... (8)

279. (தநுஷா பகவாந் சத்ரூந்) எம்பெருமான் அவதரித்து "வில்லாலிலங்கை மலங்க" என்னும்படி அஸ்த்ரசஸ்த்ரங்களாலே பகைவரை வென்றானென்பதில் என்ன வியப்பு? மணவாளமாமுனிகள் தமது திருக்குணங்களினாலேயே உலகை வென்றாராயிற்று. .... .... .... (9)

280. (பரம் தாம கரக்ராஹ்யம்) நலமந்தமில்லதோர் நாட்டை அஸ்மதாதிகளுக்கும் கைக்கு எட்டினதாகப் பண்ணுகைக்கே எம்பெருமான் மணவாளமாமுனிகளைத் திருவவதரிப்பித்தருளினான். .... .... (10)

281. (பகவாந் கும்பஸம்பூதி:) கும்பஸம்பவரான அகஸ்த்யர், பராசரர், வியாஸர் இத்யாதிகளான முனிவர்களிற்காட்டிலும் மணவாளமாமுனிகள் மிகச் சிறந்த முனிவராவர். ... .... ... (11)

282. (யே படந்தி.) ஸ்ரீவரவரமுனிமாஸ மாலையென்னும் இந்த ஸ்துதியை மகிழ்ந்து ஓதுமவர்கள் யாவரோ, அந்த இந்த பக்தர்கள் ஒருபோதும் இறையும் இடர்ப்படார். (ச்லோகத்தில் "அமீ ந ஜாதுசித்" என்றவிடத்தில் மீநமாஸ ஸ்பூர்த்திகாண்க.) .... ... .... ... (12)

ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரஷட்சதியில் மாஸமாலாஸ்தோத்ரம் முற்றிற்று.

---

## பதினோராவது பக்ஷமாலா ஸ்தோத்ரம்.

283. (யுகலம் வரமுநி.) மணவாளமாமுனிகளின் திருவடித்தாமரையிணையை நிச்சலும சிந்தை செய்பவர்கள் தங்களது கீர்த்தியினால் இவ்வுலகத்தையெல்லாம் வெண்ணிறமாக்க வல்லவர்களாவர். ... ... .... (1)

284. (ஸ்யூதாம் வரவரமுநிவர.) மணவாளமாமுனிகளின் திருக்கல்யாண குணங்களாகிற முத்துக்களால் கோக்கப்பட்ட இந்த ஸ்துதிமாலையை எப்போதும் கண்ட பூஷணமாகக் கொள்ளுமளவில் ஸ்ரீ க்ருஷ்ணபகவான் உங்களுக்கு மங்களங்களை யளிப்பன். ... ... ... (2)

285. (பக்ஷமாலாமிமாம் வாசி.) இந்த வரவரமுநிபக்ஷமாலாஸ்துதியைத் திருந்தச் சொல்லுமவர்கள் பக்கலில் எம்பெருமான் பக்ஷபாதியாயிருப்பன்; மார்பாரப் புல்கியும் அருள்வன். ... — — (*)

ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரஷட்சதியில் பக்ஷமாலாஸ்துதி முற்றிற்று.

---

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர ஷட்சதியில் பன்னிரண்டாவதான

## ஸ்ரீவரவரமுநி திதிமாலா

(இந்த ஸ்தோத்ரம் வடமொழியில் எழுத்தந்தாதியாக அமைக்கப்பட்டது.)

286. (ஸ்ரீமதி வரவரயோகிநி)—ப்ரதமை—அத்புதமான வைதுஷ்யத்திற்கு நிதியான மணவாளமாமுனிகள் பக்கலில் பக்தியுள்ளவர்கள் யாவரோ அவர்கள் ஸாத்விகர்களின் திரளில் தவறாமல் ப்ரதமஸ்தானத்தில் எண்ணப்படுவர்கள். (1)

2ɔ7. (நச்வரபுமர்த்தவாஞ்சாம்)—த்விதீயை-நச்வரங்களான புருஷார்த்தங்களில் ஆசையை விட்டுத் தொலைத்து மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகளில் அன்புமிக்கவர்கள் யாவரோ அவர்களுக்கு அத்விதீயமான நற்புகழ் விளையும். (சுலோகத்தில் நான்காம் பாதத்தில் 'சுபகீர்த்தி ரத்விதீயாஸ்யாத்' என்பதில் த்விதீயாஸ்பூர்த்தி காண்க.) ... ... (2)

288. (ஸ்யாதிஹ வரவரயோகீ)—த்ருதீயா-மணவாள மாமுனிகளின் யாதொரு கருணையின் கனத்தினால் உள்ளே மூன்றாவது கண் (ஞானக்கண்) விகஸிக்குமோ, அப்படிப்பட்ட கருணையை அவர் எஞ்ஞான்றும் என் பக்கலிலேயே செய்தருளவேணும். .... .... ... (3)

289. (திமிரம் நிரஸிதுமவநௌ.)—சதுர்த்தீ-இவ்வுலகின் கண் அகவிருளை அகற்றுவதற்காக ஸமய விசேஷங்களில் வந்து திருவவதரிக்கின்ற திருவனந்தாழ்வானுடைய நான்காவது மூர்த்தியான மணவாளமாமுனிகளை எஞ்ஞான்றும் வழுத்துவோம். .... ... .... (4)

290. ஏதத்ப்ரபஞ்சமீச:)—பஞ்சமி-இந்த ப்ரபஞ்சத்தை ஸர்வேச்வரனென்று பேர்படைத்த எம்பெருமான் ரக்ஷித்தருள்கிறானென்பது உண்மையன்று; வஸ்துஸ்திதியில் மணவாளமாமுனிகள் தாமே தமது திவ்ய ஸூக்திகளினால் உலகையெல்லாம் காத்தருள்கின்றார். .... ... .... (5)

291. (க்ஷித்யாம் வதந்தி போக்யம்)—ஷஷ்டீ-இந்நிலவுலகில் பஞ்சாம்ருதமென்கிற போக்ய வஸ்து இருப்பதாகச் சொல்லுகிறார்கள்; அஃதிருக்கட்டும்; மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்தியானது ஆறாவதான அம்ருததாரையென்பது திண்ணம். ... .... ... (6)

292. (தமிதேந்த்ரியா: ப்ரஸித்தா:.)—ஸப்தமீ-ஜிதேந்த்ரியர்களென்று பேர்பெற்ற ஸப்தரிஷிகளும் *கருப்புவில் மலர்க்கணைக்காமவேளுக்கு இலக்கானவர்களே; மணவாளமாமுனிகளொருவரே விரக்தமுநிஸார்வபௌமர். ... (7)

293. (யஸ்யாஷ்டமீந்துஸந்நிப)—அஷ்டமி-அஷ்டமீ சந்திரன் போன்ற தமது திருநெற்றியில் விளங்கும் ஊர்த்வபுண்ட்ர ரேகையே நெடுநாளாக ஸகல திவ்ய தேசத் தெம்பெருமான்களும் உகந்து அணிந்து கொள்வதென்னும்படியான மணவாளமாமுனிகள் நம்மைக் காத்தருள்க. ... (8)

294. (கீர்வாணவாசி ஸததம்)—நவமீ-ஸம்ஸ்க்ருத பாஷையில் இங்ஙனே புதிது புதிதான ஸ்துதிகளை விண்ணப்பஞ் செய்து கொண்டு மணவாளமாமுனிகளுக்குத் தொண்டுபூண்டமுதமுண்பவனாக வாழக்கடவேன். ... (9)

295. (ஸ்யாமபி சேதிஹ தசமீம்)—தசமி-அடியேன் மாளுமோரிடத்திலும் எனது நெஞ்சம் மணவாளமாமுனிகளின் சிந்தனையையிழவாமலிருக்கவேணும்.(10)

296. (துஷ்யந் விவேகரோகாத்.)—ஏகாதசி வடமொழிவேதத்தைப் பூர்த்தியாக ஓதினவர்களுக்கு அசீதி அத்யாயிகளென்று பெயர் வழங்கும்; அந்தப் பெயர் பெறுவதனால்மட்டும் பயனில்லை; மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் வல்லமை பெற்றுவிட்டால் ஸர்வஜ்ஞதை யுண்டாகும். ... (11)